உ

திருச்சிற்றம்பலம்

748

# அருணகிரிநாதர்

# அற்புத சரிதம்



இது

பி. மணமங்களரவர்களால்

இயற்றப்பட்டது





சென்னை :

கலாசிந்தாமணி பதிப்பாசிரியர்

மயிலை க. மாணிக்கவேல் முதலியார்

வெளியிட்டது

1928



[விலை அணு 6

முதற்பதிப்பு — 1905

இரண்டாம்பதிப்பு—1928



புத்தகம் கிடைக்குமிடம்:

மயிலை, க. மாணிக்கவேல் முதலியார்,
4, மல்லீஸ்வரர் கோயில் தெரு,
மயிலாப்பூர், சென்னை.



திருமணஊர் முனிசாமி முதலியார் அண்டு சன்ஸ்,
சிவகாமி விலாச அச்சுக்கூடம், சென்னை.

## பதிப்புரை

அருணகிரிநாதர் அற்புத சரிதம் என்னும் இந்நூலின் முதற் பதிப்பு 1905-ம் ஆண்டில் திருவாளர் சிறுமணவூர் சமரபுரி முதலியார் அவர்களால் வெளியிடப் பெற்றது. அப்பதிப்பு செலவழிந்து விட்டமையின் மேற்படி முதலியார் அவர்களிடமிருந்து பதிப்புரிமை யாவும் விலை கொடுத்துப் பெற்றுக்கொண்டு இதனை இப்பொழுது யாம் பதிப்பிக்கலாயினோம். முன் பதிப்பைக் காட்டிலும் உயர்ந்த தாளில் எழுத்துப் பிழையின்றி பதிப்பிக்கப்பெற்றிருக்கின்றது.

மயிலை, விபவ-சித்திரை } மாணிக்கவேலன். பதிப்பாசிரியன்.

# முகவுரை

"தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்"

என்னும் நீதி வாக்கியம் தேவார திருவாசகங்களைத் திராவிட வேதமென்று வாதிக்கும் சைவர்களும், நாலாயிரப் பிரபந்தமே திராவிட வேதமென்று பீடிக்கும் வைணவர்களுமாகிய இவ்விரு பாலாருமே யன்றி ஏனையோரும் தமிழ் வேதமென்று ஏற்றுக்கொண்ட தெய்வத் திருமொழியான திருக்குறளின் ஒன்றாம். இவ்வாக்கியத்தின் ஆக்கிய பொருளின் போக்கிற் கேற்ப ஒழுகும் பாக்கியமடைய வேண்டித் தமிழ் நாட்டினர்க்கு இன்றி யமையாதனவாம் இதமொழி கூறிச் சமரச சன்மார்க்க ஞானம் பரப்பி, அறியாமை யென்னும் அந்தகாரத்தை அகற்றி ஆதித்தன்போல சோதித் திருவுருவுடன் நீதித்திறம் புகட்டப் புன்மை நீங்கி நன்மை தேங்கும் நன்னூல்கள் பலவற்றை நம்மனோர்க்குப் பாஷாபிமானம், தேசாபிமானம், மதாபிமானமாகிய இன்னனவற்றை நன்னயமுடனூட்டி, நந்தமி ழணங்கினுக்கு ஓர் நறுமலர் மாலையுஞ் சூட்டி, நாட்டின் வாட்டத்தை ஒல்லும் வகையானேட்டிடு முயற்சி மேற்கொண்டு பதிப்பிக்கத் துணிந்த பலவற்றுள், இதுவே முதலாவதாம். இனி, மற்றவை வெளிவரும்.

கற்றறிந்த செல்வக் கலைவாணர் பாலணுகிச்
சொற்றிறங்க ளோதாவிச் சோம்பனேன்-சிற்றறிவாற்
சோராவார் வந்தூண்டச் சொன்னநூ லிற்றவறு
பாராவா ரத்துமணல் பார்.

பி. மணமங்களன்.

திருச்சிற்றம்பலம்

# அருணகிரிநாதர் அற்புத சரிதம்

## பாயிரம்

### கரிதிறைகொண்ட கணேசர் காப்பு

அருண கிரிநாத ரற்புதநற் காதை
யிருமை வினைதீர்ந் தியம்ப - வரையா
யெரியி னுருக்கொண்ட வெந்தை யருணை
கரியைத் திறைகொண்டார் காப்பு.

### அருணசலேசுரர் துதி

ஒருமானைக் கரத்தினில்வைத் தொருமானைச்
சிரத்தினில்வைத் துலக மேழும்
தருமானை யிடத்தினில்வைத் தருள்வானைப்
பவளநெடுஞ் சயிலம் போல
வருமானை முகத்தானை யளித்தானைப்
பெருமானை மகிழ வேறும்
பெருமானை யருணகிரிப் பெம்மானை
யடிபணிந்து பிறவி தீர்ப்பாம்.

## உண்ணாமுலையம்மன் தோத்திரம்

காரொழுகுங் குழலாளைக் கருணைவழிந் தொழுகுமிரு
 கடைக்கண் ணாளை
மூரலிள நிலவொழுகப் புழுகொழுக வழகொழுகு
 முகத்தி னாளை
வாரொழுகுந் தனத்தாளை வடிவொழுகித் தெரியாத
 மருங்கு லாளைச்
சீரொழுகும் பதத்தாளை யருணையுண்ணா முலையாளைச்
 சிந்தை சேர்ப்பாம்.

## சுப்பிரமணியர் வணக்கம்

கொந்தாரு மலர்ச்சோலை யருணைநெடுங் கோபுரத்திற்
 குமர வேளை
வந்தாரை வாழ்விக்க வடவீதி தனிலுறையு
 மயிலி னாளைக்
கந்தாருங் கடகளிற்று மகவாற்குத் தருநிழலுங்
 கனக நாடுந்
தந்தானை யலர்கடப்பந் தாரானைப் பணிபவர்தாள்
 தலைமேற் கொள்வாம்.

## அருணகிரிநாதர் துதி

அருண கிரியார், சரண கமலப்
பொருவி லிணைகள், சிரம ணிகுவாம்.



## க. உற்பவ அற்புதம்

அமிழ்தினு மினிய தமிழ்மொழிக்கரசியாய் அவனியி லவதரித்து அரியபெரிய நீதிவாக்கியங்களை அன்பாயுரைத்துத் தம்மறிவை விளக்கிய அம்மையாராகிய ஔவைப் பிராட்டியாரால் சோறுடைத்தென்று சிறப்பாய்க் கூறப்பட்டது, நீர்வள நிலவளங்கள் நிரம்பப் பெற்று நித்தியானந்த பீடமாய் நிலையுற்று விளங்கும் சோழவளநாடாம். மாவிரதர் மகிழ்ந்து-குளிக்கும் மகிமை வாய்ந்த காவேரியாறு பாயப்பெறும் கண்ணியமுடையதாகிய இப்புண்ணிய பூமிக்குப் பாவிரித்துரை சொல்லும் பண்டிதர் நிறைந்த காவிரிப்பூம்பட்டினம் திலகம்போல் இலகியிருந்தது. தெய்வீகம் விளங்கி மெய்வீசிநின்ற இத்திவ்யநகரத்தில் வேளாண் மரபில் தோன்றி வேளாளச் செட்டியார் என்று விளங்கி வியாபார விருத்தியினால் வாழ்ந்து, நிரம்பிய தனவந்தராகவும், சிறந்த சிவ பக்தராகவும் சீருற்றிருந்து, சிவபெருமான் தம்மகனாக வந்து உதிக்கப் பெற்று, அவமெலாம் ஒழித்து அன்னவரிடத்தே நன்னய மிகுந்த ஞானசாத்திரங்களைக் கற்றுத் திருவெண்காட்டடிகள் என்னுந் திருநாமத்தால் இப்போதைக்குச் சுமார் 680-வருடங்களுக்கு முன் ஒரு புண்ணிய புருடரிருந்தார்.

ஓயாப்புகழ் கொண்ட தாயுமானவரால் "பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப் போல் யாருந் துறக்கை அரிதரிது" எனக் கூறப்பட்ட கனத்தவரான இத் திருவெண்காட்டடிகள்,

உயிர்ச்சார்பாகிய உற்றார் உறவினரை ஒழித்து, அற நெறியாகுந் துறவு பூண்டு தமது பட்டினத்தை விட்டகன்று பற்பல நற்பதிகளுஞ் சென்று சேவித்துத் திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, பண்டார மும்மணிக்கோவை, திருக்கழுமல மும்மணிக்கோவை, கோயில் நான்மணிமாலை முதலிய பிரபந்தங்களைப் பாடிச் சிவகாமியம்மையார் பார்ப்பினி யுருவாய்ப் பசிதீரத்தந்த அன்னம்புசித்துத் திருத்தினை நகர், திருவெண்ணெய்நல்லூர், விருத்தாசல முதலான திருத்தலங்களைத் தரிசித்து உண்ணாமுலையிடங் கொண்ட அண்ணாமலையார் வாழும் அரும்பதியாகிய அருணை நகரை யடைந்து அன்புடன் அரனைப் பாடி அங்கு சிலநாள் வீற்றிருந்தனர்.

அப்போது, மயிலையொத்த சாயலும், குயிலைப் பழித்த குரலுமுடையவளாய், அன்னப்பட்சிகளும் தன்னிடம் மென்னடை கற்கலாம்போல் ஒய்யாரமாய்ப் பைய நடப்பவளாய், சேல்போன்ற விழியுடன் மால்பரப்பி, ஆடவர் மனதை யலக்கழித்துக், காமனுக்கு வஜ்ராங்கி யென்றும், காணப் பரிமளிக்கும் கஸ்தூரியென்றும், சொல்லற்கியைந்த கட்டழகியாகிய முத்து என்னும் பெயருடைய சிவாலய கைங்கரியத்திற்குரிய உருத்திர கணிகையானவள், ஒருநாள் இரண்டு குடம்போன்ற இருதனத்தைத் தாங்கி, மருங்குல் துவண்டு வருந்த, கீழ்க் கோபுரவாயிலிடம் குடிகொண்டிருந்த சுவாமிகளை நெருங்கி வந்தபோது, காமாதி யாறினையுஞ் சுட்டெறித்த பட்டினத்தடிகள் காதல்மீறிக் கிட்டப்போய் எட்டிப்பிடித்துக் கட்டி

யணைத்தனர். தாடியும் மீசையும் நீடி வளர்ந்து, வாடிய முகத்தினராய், ஆடையழகுமில்லாத அருந் தவத்தவரை அலட்சியஞ்செய்து ஓடி விலகினாள் முத்து. நாடிய எண்ணங் கைகூடிடப் பெருதவரான அடிகள் காதல் மீதூறினதாற் கலிதமான விந்தினை யோர் சருகிலிருத்திக் கஷ்டநீங்கி இஷ்டம்போல் நிஷ்டைகூடி யிருந்தார்.

பத்திமை காட்டாதோடிய முத்து சித்தங்கலங்கி மெத்தத் தவித்து அத்தனை யெண்ணி அதிசீக்கிரமாய் இல்லத்துள் மெல்லெனப் புகுந்து, ஆயவிதமெல்லாம் தாயினுக் குரைத்தாள். இவ்விர்த்தாந்தங் கேள்வியுற் றதும், தாய்க்கிழவி பேய்போலாடிப் பதை பதைத்து "ஐயோ! பாதகி! துய்யோன்தன்னைத் துறக்க லாமோ? முற்றத்துறந்த முனிபுங்கவர் பற்றி யிழுத் தால் சற்று மிணங்காது அற்பமா யெண்ணி அகன் றிடப்போமோ! ஞானிகள் நோக்கம் நமக்குங் கிடைக்குமோ! தானாக வந்த சீதேவியைக் காலா லுதைத்துத் தள்ளினதுபோல் செய்தனையே!" என்று சொல்லி மனம் வருந்திச் சற்றுநேரத்தில் தைரியங் கொண்டு, மடமையுடைய மகளை உடன்கொண்டு, மாதவர் இருக்குஞ் சோலையைச் சேர்ந்து, அவ்விடத் தில் தியானத்தமர்ந்திருந்த திருவாளருடைய திருவடி களை இருவருமாக உருகிப் பணிந்து நிற்கும்போது, கிழவியானவள் "பழுது நினைத்துப் பதுங்கியோடிய பாதகத்தினளான இம்மாதுரத்தினத்தை மன்னித்து இன்னருள்புரிந்து ஏற்றுக்கொள்ளவேண்டும்" என்று துதித்தாள்.

இவ்வார்த்தைகளை ஆர்த்தியுடன் பூர்த்தியளவும் பொருந்திக்கேட்ட புனிதமூர்த்தியானவர் புன்னகை புரிந்து,

"தோடவிழும் பூங்கோதாய் தோகையுனை இப்போது
தேடினவர் போய்விட்டார் தேறியிரு - நாடிநீ
என்னை நினைத்தால் இடுப்பில் உதைப்பேன் காண்
உன்னை நினைத்தால் உதை"

என்று திருவாய்மலர்ந்தருளினர். கல்வியறிவுடைய மெல்லியலானபடியால் அவ்வெண்பாவின் பொருளை யுடனே யறிந்த அவள் "உமது உதை பட்டாலும் இதமேயாகும்" என்று பின்னும் வேண்டி நிற்கவே, அவர் தம்மெதிரில் இருந்த சருகைக் காட்டினர். முத்துப்போன்ற மூன்று துளிகளைக் கண்ட முத்து தன் தாயின் கட்டளைப்படி வாயினுட்கொண்டு பானஞ் செய்து ஊனந் தீர்ந்தாள். பிறகு, இருவரும் இன்பமுற்றவர்களாய் இல்லத்திற்குப் போய் உண்டு உறங்கினர்.

பொன்றுதலில்லாப் புகழாளராகிய சண்முகப் பெருமான் அன்றிரவு ஆறுதல் கூறத் தமது ஆறு முகங்களுடனே முத்தினுடைய கனவில் தோன்றித் திருவருள்புரிந்து மறைந்துபோயினர். நல்ல கனவு கண்ட நல்லாள் துள்ளியெழுந்து கள்ளமொன்றில்லாது கண்டகனவினை விண்டனள் தாய்க்கு. அடங்கா மகிழ்ச்சி இடங்கொண்டெழப்பெற்ற பேரிளம் பெண்ணாகிய கிழவி பட்டினத்தடிகளுடைய பரந்த கீர்த்தியை அறிந்தமட்டும் அச்சிறியாளுக்குச் சொன்னாள்.

அவளும் அகமகிழ்ந்து முகமலர்ந்து அன்போடு கேட்டு ஆனந்த பரவசமாயினுள். "குலதெய்வமான குமாரக்கடவுளின் கிருபை இலகுவில் கிடைத்தது என் பாக்கியமே" என்று அவள் சந்தோஷித்திருக்கும் நாளில் கருப்பக் குறிகள் அவளிடம் தோன்றலாயின. மன்மதன் மகுடம்போல் மதர்த்து நின்ற முலைமுகத்திற் கறுமை முதிர்தலையும், முழுப் பிரகாச முகமானது வெளுத்தலையும், மேனியெங்கும் பச்சை நிறம் படர்தலையும், வேல்போன்ற விழி குழிதலையும், சால்போல் வயிறு பருத்தலையுங் கண்ட தாதியர் ஆதியானேர் தங்கா மகிழ்ச்சி பொங்கியெழப் புங்கவன் அருளைப் போற்றி நின்றனர். மாதமொரு பத்தும் போதியவுடன் மாதுசிரோமணிக்கு வேதனை மிகுந்து நாதனருளால் காதலெழுப்பும் கட்டழகுடைய நீதிலாண்குழவியொன்று ஆதவனைத்த சோதியுடன் பூதலத்துத் தோன்றியது. பெண்மக்களைப் பொன்காய்க்கும் பூவென்று போற்றிவிரும்பும் வேசியர் குலத்தினராகிய முத்தும், தாசித்தொழில் மேற்கொண்ட அவள் தாயும், ஆண்குழந்தை பிறந்தது கண்டு வீண் விசாரங்கொள்ளாமல் குமாரனைப் பெற்றெடுத்த குலமகள்போலக் குதூகலமாயிருந்தார்கள். இவ்வற்புதத்தைக் கண்ட பொற்பின் மகளிர் பற்பலரும் கற்புக் கரிசியோ முத்து என்றுகருதி காரணமிதற்கு வேறுளதென்று கடைப்பிடித்து உணர்ந்து பூரணர் போலப் புன்மை நீங்கி நன்மை தாங்கி யிருந்தனர்.

## உ. இளமைப்பருவமும் எழிலின்னுருவமும்

பொற்கொடிபோலச் சிற்றிடைதிவளும் விற்பன மடந்தையாம் பொற்புறு பாவையாகிய முத்திணிடம் அற்புதமாய் உற்பவித்த ஆண்குழந்தைக்கு விலைமக ளிர் குலவழக்கப்படி அருணகிரி யென்று நாமகர ணஞ் செய்தனர். வெண்காட்டடிகள் விந்து சம்பந்த மாய்ப் பிறந்த பெருமையால் அந்தப் பாலகன் சுந் தரமிகுந்தவனாய்த் தந்திக்கன்றுபோல் பந்துக்களெல் லாம் விந்தையோடு விழித்துப் பார்க்கும் வண்ணம் வெகு அந்தமாக வளர்ந்தான். ஆயினும் துடுக்குத் தனம் மிஞ்சிய மிடுக்கனாயிருந்ததால், அடுத்தவரெல் லாம் அவனைக் கண்டு அஞ்சிச் செஞ்சொல் கூறிச் சேவித்துப்போவர். அருணகிரி மெல்லென வளர்ந்து ஐந்துவயதடைந்தனன். அதன் பின்னர், அன்னையா கிய முத்தம்மையினாலும் அக்காளான ஆதியினாலும் அன்புடன் போஷிக்கப்பட்டு வந்தான்.

---

## ௩. காமலீலையில் ஏமாப்புற்றது

ஐந்து வயதடைந்த அருணகிரியைத் தருண மறிந்து தக்க பள்ளிக்கு அனுப்பினள் அவன் தாய். கள்ளத்தனமேற்கொண்ட "பிள்ளையாண்டன்" பள் ளியை விட்டு பகற் போதிலேயே மெள்ள மெள்ள வேசியராசை பூண்டு, பத்து வயதானதும் நித்திய சுமங்கலிகளோடு நித்திரை புரிய மெத்தவும் சித்தங்

கொண்டு நித்தமும் அங்கேயே காலங் கழிப்பானாயி னன். இஷ்டப்படி திரிந்து பொருளை நஷ்டப்படுத் திய துஷ்டனாகிய அருணகிரியைக் கஷ்டப்படுத்த அவன்தாய் நினைக்கும்போதெல்லாம், கனவில் குமார தெய்வம் காக்ஷி தந்து ஆக்ஷேபஞ்சொல்லி பக்ஷமுண் டாகும்படி பற்பல உற்பன வார்த்தைகளை உரைத்து ஒளிப்பார். செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மண வாளராகிய சுப்பிரமணியப் பிரானுடைய ஒப்பில் வார்த்தைகளால் அவள் உளமகிழ்ந்திருப்பா ளாயி னும் ஒவ்வோர் சமயங்களில் வெவ்வேறு விதமா யெண்ணி விசனமுறுவாள். அருணகிரியை அரு கழைத்து அன்பான வார்த்தை சொல்லி நன்னெறிப் படுத்த முயற்சி செய்வாள்.

"வேசியராசை மோசத்திற் கிடமாயிற்றே! அப்பா! இவ்வுண்மையை நாமன்றோ நேரத்தெளிந்து அனுபவிக்கின்றோம். மலைகளொத்த முலைகளுக்காசை வைத்து தூண்டிலிலே மீன் சிக்கினாற்போல் மெலிந்து ஏன் சிக்கிக்கொண்டோமென்று எத்தனையோபேர்கள் ஏங்கித் திரிவதை அறிந்திருந்தும் வீங்கிய காமத்தால் தேங்கித் திரிதல் தீதேயல்லவா? உன் தனத்தைக் கொடுத்து ஒட்டாண்டி யாகும்வண்ணம் தந்தனக்காரி கள் செய்யும் தந்திரங்களுக் குட்பட்டு நிந்தனைக்கு ஆளாதல் நீதியாகுமா? குழந்தாய்! அன்றொருநாள் அம்புஜாக்ஷி வீட்டில் ஓர் ஆடவன் இருப்பதையறியா மல் ஆத்திரத்துடன் வெகு நேர்த்தியாய் உன்னெண் ணத்தைப் பூர்த்திசெய்து கொள்ளும் வண்ணம் நீ போனபோது, பொறாமை மிகுந்து போராய் முடிந்து

போவார் வருவாரெல்லாம் போக்கிலே புறங்கூறிப் பரிகசித்ததை நினைக்கக் கலக்கமுண்டாகிறதே! இந்த அவமானங்களுக்கெல்லாம் ஏனோ ஆளாகின்றாய்? அருணகிரி, காமத்தினால் விளையும் கடுந்துயரங்களை யெல்லாம் நீ கவனித்ததில்லையோ!

கள்ளுண்டல் காமமென்பகருத்தறை போக்குச்செய்த
தெள்ளுண்டகாமம்போல வெண்ணினிற் காணிற்கேட்கில்
தள்ளுண்டவிடத்தினஞ்சந்தலைக்கொண்டாலென்னவாங்கே
யுள்ளுண்டவுணர்வுபோக்காதுண்டபோதழிக்குங்கள்ளுண்.

காமமே கொலைகட்கெல்லாங் காரணங் கண்ணோடாத
காமமே களவுக்கெல்லாங் காரணங் கூற்றமஞ்சுங்
காமமே கள்ளுண்டற்குங் காரண மாதலாலே
காமமே நரகபூமி காணியாக் கொடுப்பதன்றே.

என்ற வாக்கியங்களை நீ வாசித்தாலன்றோ உனக்கு அவைகளின் வாய்மை விளங்கும்! ஓரிரண்டு எழுத்துக்கள் ஓதியிருந்தாலும் அவற்றின் உண்மைப் பொருள் இதுவென்று உன்னால் உணரமுடியும் அதுவுமில்லை! தேவடியாள்வீடே தேவாலயமாய்க் கொண்டு திரியும் பரத்தையர் வீட்டுப் பக்ஷிக்கு பாடமேதுக்கு பள்ளியேதுக்கு!

பணம் பிடுங்கித்தின்னும் பாதகத்தவரான வரைவின் மகளிரை விரைவோடு தழுவிவந்தோர் எத்தனை பேர்கள் வேதனைக்காளாய், அவர்கள் இட்ட மருந்தால் கிட்டப்போதல் ஒழிந்து குட்டியிட்ட நாய் போல் குரைத்துப் பொருமல்நோயும் இருமல்பேயும் பிடித்துப் பொற்பிழந்து பொலிவழிந்து பொருளெல்

லாந் தோற்று மருளராய் மாண்டுபோதலை மாநிலத்தில் காண்கில்லையோ ! தொன்றுதொட்டு நின்றிருந்த பொன்னையெல்லாம் போக்கிவிடுவை யென்பதற்காகக் கவலை சிறிதே கொண்டேனாயினும் நீ மேற்கொண்ட தொழிலினால் உன்னுடம்பிற்கு உண்டாகக்கூடிய கெடுதிகளைக் கணப்பொழுது எண்ணும்போது என்னுவி யெரிந்து தவிக்கின்றதே ! கண்மணீ ! அருணகிரி ! நீ ஏதுமறியாச் சிறுவன். இளங்கன்று பயமறியாது என்ன இழிதொழில் கைக்கொண்டாய். நீ கைக்கொண்ட தொழில் இழி வுடைத்தென்றும், இடும்பைக் கிலக்கானதென்றும் நீயின்னுந் தேர்ந்தாயில்லை. என் வார்த்தைகளைக் கேட்டு நடந்துகொள். "தாய்சொற் றுறந்தால் வாசகமில்லை" யென்பது நீதி வாக்கியம். மனிதர்களுடைய தேக சுபாவமோ மிகவும் மிருதுவானது; அதற்கு எவ்விதக் குறைபாடு மாறுபாட்டம் நடந்தாலும், அது தன் பலனை அவசியம் காட்டிவிடும். ஒருகண இன்பமென நீ கருதுவது ஓயாக் கவலைக் கிடனாய் உன்னுடல் உள்ள நாள் வரையிலும் ஊன்றி நிற்கும். வேசியர் வீட்டையடைந்தா ரெவ்வொருவரும் அவர்களுக்குத் தாசர்களாய் மோசம்போய் அரையாப்பு, அண்டத்துவாதம் முதலான நோய்களுக்கு இரையாகாமற் போவதில்லை. உலகத்தில் பெண்ணோயிற் பெருநோய் கிடையாது, சொன்னேன்" என்று சொல்லிவரும்போதே மெல்ல நடந்து மெல்லியர் வீடடைவார் பொருவில் சீர்த்தி யருணகிரியார்.

## ச. முத்தம்மை யத்தனுலகடைதல்

அருமைக் குமரனும் அருணகிரியார் மீது வைத்திருந்த அன்பின் மிகுதியால் நன்மதி யுரைப்பவளான வித்தகநடன முத்தம் தனக்கு முதுமைப்பருவம் கதுமென வந்தது கண்டு தன் மகளை யருகிலிருத்திக் கொண்டு "கோதறு குணம்படைத்த ஆதியாம் காதலியே ! விண்ணுலகடையும் வேளை யெனக்கு நாளை நாளை யென்னும்படி நண்ணிற்று. என் காலத்திற்குப் பின்னுளில் உன் தம்பி அருணகிரியை நன்காதரித்தல் உன்னுடைய கடமையாகும். அவனுக் கெவ்வித வருத்தமாயினும் குறைபாடாயினும் உண்டாகாவாறு செவ்விபெற நடந்துகொள். குமாரதெய்வம் அவன் மீது அபார கருணை கொண்டிருக்கிறது. அன்றியும் அவன் "காதற்ற ஊசியும் வாராதுகாண் கடைவழிக்கே" யென்று விட்டுத் துறந்த பட்டினத்தடிகளின் புத்திரசிகாமணி. அவன் இப்போது முறை தப்பி நடந்தாலும் இறைவனருளினுல் முத்தமிழ்த் துறையின் முறைபோகிய உத்தமக் கவிகளுள் உயர்ந் தோனுவானென்றே சற்குணர் பலரும் சாற்றுகிற்கின்றனர். அவனுல் நங்குடி மங்கலில் பெரும்புகழுடையுமாதலால் நான் ஓதியவாறே அவன்மேல் பற்று வைத்து ஒற்றுமையுடனே உயிர்வாழ்ந்திரு" என்று போதனை செய்வள். இன்னணம் பன்னுள் கழிந்த பின் ஓர் நன்னுளில் மன்னவர் மன்னன் மாவுலகடைந்தனள்.

## ரு. பரிபாககாலம் அருகாக வந்தமை

செங்கைப் பொருளெல்லாம் கொங்கை வாய்த் தேனுக்காக் கொள்ளைகொடுத்த கோமள புருஷராகிய அருணகிரியார் தன்னோடு பிறந்த மின்னொளிபோன்ற ஆதியென்பாளின் அனுசரணைப்பி லிருந்துகொண்டு அவள் "ஆசைமனங் கொடுத்தும் இதழ்கொடுத்தும் அபிமானந்தனைக் கொடுத்தும் மருவு இரண்டு தனங் கொடுத்தும்" வரப்படுத்தும் பொருளையெல்லாம் வாரியிறைப்பதுபோல் நாரியருக்கு நல்கிவந்தார். காளையாயிருந்த வேளைபோனதுபோல், நாளடைவில் ஈளைமுதலிய இழிரோகங்கள் கண்டு இறுதியில் அருண கிரிக்குக் கஷ்டந்தரும் குஷ்டநோயுண்டாய், இஷ்ட மித்திரரும் நிகர்ஷ்டமாய் எண்ணும்படியாய்விட்டது. ஆடுவிற்றும் மாடுவிற்றும், கடைசியில் ஆடையாதி விற்றும் பற்றுதற்கு ஓர் பொருளுமில்லாது, ஓர்நாள் அருணகிரி காமமிகுந்து கண்களிருண்டவனாய் ஆதி யென்னும் தமக்கையிடஞ் சென்று "அக்காள்! மன் மதனென்னும் துன்மார்க்கனால் வாதனைப்பட்டு வேத னையுறு வேனுக்குக் காமநோய் தீரத் தாமதஞ் செய் வது பூமிவிரும்பும் பொன்னேயாம். அஃதில்லாது அவலமுறுகின்றேன்; என்னுடைய துன்பந் துடைப் பது உன்னுடைய கடன்" என்றார்.

தரித்திர பீடையால் வருத்தமுற்றிருந்த திருத் தகு ஆதியும் அவன் கருத்திற்கிசையக் குறித்தபொ ருள் கொடுக்கக் கூடாதவளாயிருந்ததால் பெருந்துக்க மடைந்தாள். தன் தாயிடம் சொன்ன வாய்மையை

நினைக்குந்தோறும் அவள் செஞ்சொல் இவள் நெஞ்சகத்து எஞ்சிநின்றது. தஞ்சமென்பான்போல் தவித்து நின்ற தம்பிக்கு இங்கிதமொழி இயம்ப வெண்ணினவளாய், ஆதியென்னும் மாதர் திலகம் ஏதமொன்றில்லாமல் காதலன்போல் அவன் கையைப்பிடித்துச் சீதமலர்களின் செம்மை நறுமணஞ்சேர்ந்த சிங்கார உள்ளமைந்த பள்ளியறைக்குப் பக்குவமாய்ப் பற்றிக் கொண்டுபோய் " நம்பிகள் தலைவனுந் தம்பீ! தம்பதிகளாய் உம்பர்களும் வெம்பிடுமாறு உல்லாசத்துடனே சல்லாபித்திருக்க உனக்கு உத்தம பத்தினியொருத்தியை மணம் புரிவிப்பேனென்று குணமுறு மொழிகளை அன்பின் மிகுந்த நமது அன்னையார் அடிக்கடி இடித்திடித்துச் சொன்ன போதெல்லாம் தடுத்துத் தடுத்துக் கெடுத்துக்கொண்டாய். அவ்வழி நடந்திருந்தால் இவ்விதிக்கு ஆளாக மாட்டாயே! பொருளெலாம் பறிபோய்ப் போக்கிடமற்று ஏக்கமுற்றிடவோ எழுதினுன் ஈசன்!

"பருவநலத்தால் விரிகதிர்போல் விளங்கிக்கொண்டிருந்த உன் மேனி முழுவதும், பெண்டிர் நோயால் பெருமையிழந்து உருவங் குலைந்துபோயிருக்கும் இந் நாளில், நீ கொடுக்கும் பணத்திற் காசைப்பட்டு குணத்தோடு உபசரிக்கும் கோதையர்கள் மிகச் சிலரேயாவர். ஆதலினால், நீ மிக்க பொருள் கொடுத்தாலல்லாமல் உன்னோடு ஒக்க இருப்பதற்கு எவரும் ஒருப்படார். இவ்வித ஆபத்திலிருக்கும் உன்னுடைய தாபத்தைத் தீர்ப்பதற்கு ஓர் யுக்தி கூறுகின்றேன்" என்று ஒய்யாரமாய்ப் பரிதபித்துப் பேசுவதுபோற்

காட்டி "என் தாய்க்கு மகனாய்ப் பிறந்ததால் நீ யெனக்குத் தம்பியானாயென்றாலும், உன் தந்தையா வார் சிந்தாகுலந்தீர்த்த விந்தையாளராகிய பட்டினத் துப்பிள்ளை யென்னுஞ் சிட்டர்பிரான். அவர் காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச் சரியம் என்னும் ஆறு அவத்தைகளையும் அகற்றி யொழித்தவர். அவ்வித ஒவ்வுதலில்லா உயர் புரு டோத்தமருக்குப் பிள்ளையாய்ப் பிறந்த நீயோ காம மென்னுங் கடலில் மூழ்கி ஏமாப்புற்றிருக்கின்றாய். நம்மிருவருக்கும் தாயாயிருந்த முத்தம்மை உன் சித் தத்திற்குச் சத்துருத்துவமாய் எத்தகைய செயலும் செய்யலாகாதென்று திட்டஞ்செய்து விட்டகன்றமை யினால் உன்னிச்சைக்கு விரோதமாய் எச்சமயத்தும் நடக்க என்மனம் எழவில்லை.

"ஆகையால், இப்போது நீ கொண்ட காமம் நீங் குவதற்கான வழி யொன்றே. பரத்தையர்க்குக் கொடுக்கப் பணமில்லா தொழியவே உன் விரகத் தைத் தவிர்க்க விலைமகளே யில்லை யாதலால் குலமக ளிர் முதலியோரைப்பற்றிக் கழறவேண்டுவதில்லை. எனவே, உலகத்தில் என்னைத்தவிர வேறு பெண்டிர் இலர். நானோ உன் சித்தத்திற்கு மாறாக எத்திறத் தும் செய்யமாட்டேனென்று முன்னமே சொன்ன துண்டு. வேசியாய் வெளிவந்த எனக்கு முறை கிடை யாது. உன்னைப் பெற்றாளும், என்னைப் பெற்றாளும் ஒருத்தியே யென்றாலும், உன் தகப்பன் என் தகப்ப னல்ல. வித்தின் விசேஷத்தால் நீ வேறு, நான்வேறு ஆனோம். ஆனபடியால் மானமிழக்காமல் மனம்

நடந்து உன் மோகத்தை மாற்றிக்கொள். இதுவே என்னுடைய யுக்தி. இதைத் தவிர்த்தால் உன் காம நோய் கட்டறுவதற்கான வழி எனக்கு வேறொன்றும் தோற்றவேயில்லை. உன்மீதுள்ள அன்பின் விசேஷத் தினாலும், உன் வார்த்தைக்கு மாறு சொல்லக் கூடா தென்று கொண்டுள்ள கொள்கையினாலுமே இவ்வித யோசனை செய்யலானேனன்றி வேறில்லை'' என்று இரக்கத்துடன் அவன் மனதை உருக்கத்தக்க வார்த் தைகள் உரைத்தாள்.

---

## சு. ஊனமொழிந்து ஞானியானமை

தமக்கை தனக்கு இதோபதேசம்போல் இன்ப மாயுரைத்த வார்த்தைகளின் நேர்த்தியைச் சீர்தூக் கினவராய் அருணகிரி, ஆதி யென்பாள் பாதி வாய் மூடுமுன்னே "மான மழிக்கத்தக்க ஈன மொழிகள் இன்று கேட்குந் தீனனாயினேனே! அந்தோ! தாய்க்கு நிகரான தமக்கையையோ இச்சிப்பேன்! சீச்சீ! கெடுவினை பிடித்துக் கெட்டொழிந்தேன்! காமமென்னுங் கள்வனாற் கட்டுண்டு பாசத்தளையென் னும் மாசுபடர்ந்து அறிவின் ஒளி அறவே மழுங்கிப் போய் அற்பனானேன்! ஐயகோ! குமரேசா!

"காதள வோடிய கலகப் பாதகக்
கண்ணியர் மருங்கில் புண்ணுட னுடங்
காதலும் கருத்து மல்லால் நின்னிருதாள்
பங்கயஞ் சூடப் பாக்கியஞ் செய்யாச்
சங்கடங் கூர்ந்த தமியேன்"

தலைவிதிச் சுமை போகியதோ! காலமெல்லாம் ஏல வார் குழலார் இணையடிபற்றிப் பிணைப்புற்றிருந்த குணவீனனுக்கும் குருவருள் உண்டாகுமோ!

" திங்கட் சடையோன் திருவரு ளில்லார்
தங்கித் திரியும் சவலைப் பெருவழி
புண்ணிது வென்று புடவையை மூடி
உண்ணீர் பாம்பு ஓசைச் செழும்புண்

* * *

" பெண்ணும் ஆணும் பிறக்கும் பெருவழி
மலம்சொரிந்து இழியும் வாயிற்கு அருகே
சலம் சொரிந்து இழியும் தண்ணீர் வாயில்"

என்று குன்றுமேலிட்ட குடவிளக்கொப்ப மின்னொளிச் சொற்கள் சொன்ன என் தந்தையின் நன்னய வார்த்தை தன்னையும் நாடாது,

" தாரணியில், ஆலிக்கு வில்வேள் அமளியிலே யிவ்வுலகில்
பாவிக்கும் இந்த்ரபதம் என்னச் - சீவிக்கும்
புந்திக்கு மாலுதவும் போர்மாரன் பொக்ஷமென
வந்திக்கும் பொன் ஆலவட்டம் எனச் - சிந்தித்துச்
சூழுமணி தாங்கித் துலங்கு *குரங்காம் இரண்டு
வாழையிடைச் செந்தேனை வைத்ததென - வேழமதன்
காற்றுத் தென்றல் கரக்கினுறக் காரிகையார்
சேமித்து அலங்கரித்த தேர் என்னப் - பூமிக்குள்
வண்மை மதனூல் ஒழிய மற்றுளநூல் பொம்மெனவே
உண்மை விளக்கும் உருவமாய்த் - திண்மையுடன்
மாரன் அரசுஒழிய மற்றோர் அரசு இலையென்று
ஆர மயல் பூட்டும் அரசிலையாய் - ஈரம்

* துடை

தயங்கி அமிர்தம் ததும்பி இதமுற்று
வயங்குபொறிப் பைந்நாகம் ஆக நயங்குலவி
ஓசை மணிமேகலையின் உட்கலையின் எஞ்ஞான்றும்
ஆசை பரிமளிக்கும் அல்குலாள்"

என்று வேசையர்மீது ஆசைவைத்து மோசம் போனேனுக்கு ஈசனும் இனி இரங்குவாரோ !

பூசனை புரிவார்க்கு நேசனாயிருந்து பாசவினைக் கட்டை நாசஞ்செய்வான் என்பர் நல்லோர். நான் ஏது செய்யவல்லேன்" என்று புலம்பிக் கொண்டே அருணகிரியென்பார் பரிபாக தருணம் சரியாக வந்திடவே, காமம் என்னும் ஏமாப்பு ஒழிந்து வீட்டை விட்டு வெளியேறி அருணைநகர் அண்ணலாகிய அண்ணாமலையீஸ்வரருடைய தேவாலயத்தின் முன்கோபுரமான சொல்லாளர் போற்றும் வல்லாளன் கோபுரத்திற்குள் புகுந்து தன் தமக்கை சொன்ன தகாமொழிகளைச் சிந்திக்குந் தோறும் விகாதமேலிட்டு, உள்ளெலாம் பதைக்க ஒள்ளொளிக் கண்கள் தெள்ளிய நீர் வெள்ளமாய்க் கொட்ட, "என்ன காரியஞ் செய்தேன் ! இன்னமுமா உயிர் வாழ்ந்திருப்பேன் ?" என்று கோபத்துடன் கோபுரத்தைத் தாவி ஏறி முருகனை நினைத்த வண்ணம் "சாவேன்" என்று நாவினாற் சொல்லி மாவிரைவாய் மண்ணில் குதித்தார்.

பண்ணிய புண்ணிய பரிபாகத்திற்கு ஏற்றபடி ஆர்வமுடன் அவரவர்களுக்கு அருள் புரியும் அண்ணலாராகிய தண்ணங் கருணையாருடைய தயவினால் அருணகிரி இரணபாதை முதலிய ஏற்படாமல் உறுப்புக

ளுக்கும் ஒருகுறைவுமில்லாமல் தரையில் வீழ்ந்தவீழ்ச்சியினுல் மூர்ச்சை மட்டுமே யடைந்தார். திக்கற்றவர்களுக்குத் தெய்வமே துணையென்பது போல் பக்குவ முற்ருர்க்கும் பரமனே துணைவருதல் பண்டைக் காலத்திருந்து பலரும் தேர்ந்த பிரபல உண்மை. இவ்வுண்மை யறியாத வெண்மதியாளர் கண்மூடித்தனமாய்க் கடவுளிவ்விதம் அடியவர்க்கு உதவுதல் அசாத்தியம் என்பார். அஃது ஈஸ்வர தத்துவத்தை அறியாமை என்பதே, யாம் அதற்குக் கூறும் சமாதானமாகும்.

மூர்ச்சிதனை முனிமகன் முன்னே, முருகவேள் ஓர் முனிபுங்கவர் போல் தோன்றி, மேனி குன்றிய அவர் மானிடவுடலைத் தடவிக் "குழந்தாய், தகுதியற்ற காரியங்களையே மிகுதியாய்ச் செய்துவந்து வெய்தே உன் வாழ் நாட்களை யெல்லாம் வீழ்நாட்களாக்கித் தாழ்வுற்றுத் தளர்ச்சி யடைந்தாய். இத்தகைய கொடிய செய்கைகளால் * மிடியுறுதலை யொழித்து அடியவனென்னப் ‡படியில் உயர்ந்திரு. உனக்குச் சடாக்ஷர மந்திரத்தை உபதேசிக்கிறேன். நீ அதனை அல்லும் பகலும் சொல்லிக்கொண்டே செபம் செய்திரு. விப்பிர சிகாமணியாகிய சுப்பிரமணியர் சொற்பகாலத்தில் அற்புதமாய்க் காக்ஷி அளிப்பார். இன்று முதல் நீ §அறவினை பழுத்த துறவியாயிரு. பிச்சைச்சோ யிச்சித்தவனுய்த் துச்சமற்றுத் துலங்குவாய். உன் பெயர் அருணகிரிநாதர் என்று அவனி முழுவதும் பவனி வந்து கொண்

---

* தரித்திரம். ‡ பூமி. $ தருமச்செயல்.

டிருக்கும். எவனும் உனக்கு இணையாகான்'' என்று சொல்லிவிட்டு ஒல்லையில் மறைந்தார்.

அந்த க்ஷணமுதல்,

பேய்போல் திரிந்து பிணம்போல் கிடந்து
இட்ட பிச்சை யெல்லாம்
நாய்போல் அருந்தி நரிபோல் உழன்று
நல்மங் கையரைத்
தாய்போல் கருதித் தமர்போல் அனைவர்க்கும்
தாழ்மை சொல்லிச் * சேய்போல்

இருந்துவந்தார் உண்மை ஞானந் தெளிந்த உத்தமராகிய அத்தனடியார் அருணகிரிநாதர்.

இவர் கந்தனைச் சிந்தித்துக்கொண்டே மந்திர உச்சாரணமாக சடாக்ஷர நாமத்தினைச் செபித்துக் கொண்டு அருணைக்கோபுரத்தில் அமர்ந்திருக்க, அக் காள் ஆதி யென்பவள் அன்றிரவு முழுவதும் இவர் திரும்பி வராதது கண்டு பெருங் கவலை கொண்டு, நெருங்கிய வீடுகளிலுந் தெருக்களிலும் தேடித்தேடி அலைந்தாள். தான் சொன்ன வார்த்தைகளால் மன மருண்டு மங்கையர் வீடுகள் எங்குஞ் செல்லாமல் தங் காத் துயரத்துடன் தன்னுயிர் விட்டானோ என்று தடுமாற்ற முற்றாள். "தம்பி! தம்பி!'' யென்று தவித்து நின்றாள். தரித்திரத்தால் நெருக்குண்டு இருந்ததால் தக்கவுதவி செய்வாரும் ஒருவரில்லை. தமி யளாய் எங்கும் தேடிக் காணாமல் தளர்ந்த தேகத்து டன் தலைகவிழ்ந்து கொண்டு மறுநாள் தன் வீதிவழி யாய்ச் செல்லும்போது, இவள் கோலத்தைக் கண்டு

---

* குழந்தை.

இழிசொல் கூறிப் பரிகாசஞ் செய்து நின்றார் பலருள் ஒருவன் இரக்கங்கொண்டு "காமிகள் தலைவனை உன் தம்பி சாமிவேஷம் பூண்டு சழக்குக் காட்டிக் கொண்டு வல்லாளன் கோபுரத்தில் நல்லாளன்போ லுட்கார்ந்திருக்கின்றான்" என்றான்.

"இருக்கிறானா!" என்று சுருக்காய்க் கேட்டு விருத்தாந்த முழுவதும் விளம்பரமாய் அறிந்து கொண்டு, ஆதியென்பவள் பாதிசந்தோஷத்தோடு கன்றினைத்தேடிப்போகும் தாய்ப்பசுபோல் தாராள மாய்க் கோபுரவாயிலை நாடிப்போய்ப் பார்க்கும் போது, அருணகிரிநாதர் அன்பே உருவாய் சடாக்ஷர தியானத்தில் அசைவற்று அமர்ந்திருத்தலைக் கண்டு, அருகில் நெருங்கி "அப்பா அருணகிரி! என் தம்பீ! எதற்காக நீ ஆண்டி வேடம் பூண்டாயப்பா! விளை யாட்டு வார்த்தைகள் வினையாய் முடியப்போமோ! விபரீதமொன்றையும் நானெண்ணினவ ளல்லவே! சீலம் சிறிதும் குன்றாத என் வார்த்தைகளா உன்னை இக்கோலம் கண்டன?" என்று விம்மி விம்மி கூக்குரலிடுவதைக் கண்ட அருணகிரிநாதர் அவளை நோக்கி "அம்மணி! திவலையளவுங் கவலை கொள் ளாதே! ஆண்டவர் என்னை ஏன்றுகொண்டருளினார். நான் கிருதார்த்தனாயினேன். உனக்கும் ஓர் குறை யில்லை. எனக்கு நீ செய்த உபகாரத்திற்காகத் தனக்கு நேரில்லான் உனக்குத் தயைபுரிவான். அருணைக் கட வுளின் கருணையுனக்குண்டு" என்று சொல்லிவிட்டுத் தியானத்திருந்தார். சற்றுநேரம் அங்கிருந்து உற்ற வாறெல்லாம் உணர்ந்த ஆதி, பற்றொன்றில்லாப் பரம

யோகியாய் விளங்கிய அருணகிரிநாதர் முன்னம் தன் தம்பியாயிருந்த அருணகிரிக்கு முற்றும் மாறுபடுதல் ஏறிட்டறிந்து எண்ணமொன்றில்லாது நண்ணினுள் வீடு.

---

## எ. திருப்புகழ்பாடும் பெருந்திறம் பெற்றது

பிக்ஷான்னமே இஷ்டான்னமாய் உண்டு சடாக்ஷர உச்சாரணமே உயர்சாதனமாய்ப் பன்னிரண்டு வருஷங்கள் உன்னதமாயிருந்த பின்னர், சண்முக தேவர் உண்முகக் காக்ஷி தந்து "அருணகிரிநாத! கிரண ஒளிபரப்பும் கதிரவன்போல மதுர வாக்குடனே கேட்டோர் அதிரும் வண்ணம் நம்புகழ் பாடுதலையே நாடியிரு" என்று அருளிச்செய்தனர்.

"நானெங்ஙனம் பாடுவேன், ஐயரே! நற்றமிழ் வல்ல ஞானசிகாமணிகளைப் பற்றித் தொடர்ந்து கற்றேனில்லையே! கல்வியின் வாசனை கனவிலும் பிடித்தறியேன்! கவிபாடுதல் எப்படி முடியும்?" என்று அருணகிரிநாதர் குறையிரந்தனர்.

எல்லாம் வல்லோராகிய எங்கள் பெருமான் "முத்தென்று வாய்திற. எல்லாக்கலைகளும் சித்தமாய் உன்னைவந்து அடையும்" என்று சொல்லிப்போய் விட்டார். அப்படியே அவர் ஆக்கினை மேற்கொண்டு அன்பின் மிகுதியால் நம்பிக்கை கொண்டவராய் முத்தென்று வாய் திறந்ததும் முதிருஞ் சுவை கொண்ட மதுரங் கனிந்த, மாவண்ணச் செய்யுட்கள் மலர்போலுதிர்ந்தன.

தத்தத்தன தத்தத்தன தன
தத்தத்தன தத்தத்தன தன
தத்தத்தன தத்தத்தன தன—தன தான.

முத்தைத்தரு பத்தித்திருநகை
யத்திக்கிறை சத்திச்சரவணன்
முத்திக்கொரு வித்துக்குருபரன்-எனவோதும்,

முக்கட்பர மற்குச்சுருதியின்
முற்பட்டது கற்பித்திருவரு
முப்பத்து முவர்க்கத்தமரரும்-அடிபேணப்,

பத்துத்தலை தத்தக்கணைதொடும்
ஒற்றைக்கிரி மற்றைப்பொருதொரு
பட்டப்பகல் வட்டத்திகிரியில்-இரவாகப்,

பத்தற்கிர தத்தைக்கடவிய
பச்சைப்புயன் மெச்சித்தருபொருள்
பட்சத்துடன் ரட்சித்தருளுவ-தொருநாளே;

தித்தித்திசை ஒக்கப்பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப்பயிரவி
திக்கொக்க நடிக்கக்கழுகொடு-கழுகாடத்,

திக்குப்பரி வட்டக்கலைகொடு
சித்ரப்பவு ரிக்குத்திகுதிகு
திக்குத்திகு திக்குத்திரிகிடம்-எனவோதும்,

கொத்துப்பறை கொட்டக்களமிசை
குக்குக்குகு குக்குக்குகுகுகு
குத்திப்புதை குக்குப்பிடியென-முதுகூகை,

கொட்புற்றெழு நட்புற்றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக்குலகிரி
குத்துப்பட வெற்றிப்பொரவல-பெருமானே.

ஓர் வண்ணச்செய்யுள் இவர் முதன் முதல் பாடியது. அன்றுமுதல், ஆசுகவி, மதுரகவி, சித்திர கவி, வித்தாரகவி யென்னும் நாற்கவிப் புலமையும் வாய்க்கப்பெற்று, மற்றோரால் பாடுதற்கு மகாகஷ்ட மாகிய வண்ணக் குறிப்புகளினாலேயே ஆறுமுகன் சீர்த் திருப்புகழ் பாடுதலையே வீடுபேற்றிற்குக் கைகூடிய சாதனமாக் கொண்டிருந்தார். துஷ்ட சேர்க்கையால் வந்த குஷ்டநோயும் தூர ஓடிற்று. மாரன் அழகைக்கெடுக்கும் மகாரவிக சுந்தரராகிய குமாரக் கடவுளின் கோடிசூரியப்பிரகாசங்கொண்ட பேரழகு இவர்க்கு வந்து வாய்ந்தது. தாசிமகன் என்று ஏசி நின்ற இழிசனரெல்லாம் "சாமி! சாமி!!" என்று நேசமுடன் நேர்நில்லாது ஓர்புறமாக ஒதுங்கி நின்று வஞ்சனை யொழித்து அஞ்சுதலுடனே அஞ்சலியஸ்தராய் அடங்கி நடக்கலானார்கள்.

---

## அ. சித்துமூர்த்தியாய் மெத்தப்பிரகாசித்தல்

அற்புதவிதமாய்ப் பொற்புடன் விளங்கிய அருணகிரிநாதருடைய கற்பனா தேர்ச்சியும், நற்றமிழ்ப் புலவரும் நாணியோடிட நவில்கின்ற பற்பல வண்ணப்பாடல்களும், பட்டினமுழுவதும் பரவிவிடவே, கட்டழகுடனே முட்டுமூலை விட்டு எட்டியடிவையா இளம் பெண்கள் முதல், நரைத்துத் திரைத்து நாளையின்று என்றுள்ள நாரிகளும், ஆடவரும் வேற்றுநாடவரும், இளையோரும் முதியோரும், ஏழையும், ஏழ்கோடி பொன் உள்ளானுமாக எவ்வெவரும் அவ்வி

டத்தில் வந்து கல்விக்கொண்டார்கள். அருணகிரி நாதரும் சர்வ ஜீவதயாபரனுகிய ஷண்முகப்பெருமான் தண்ணருந்தனியருளால் தம்மை யண்டினோர் வினைகளையெல்லாம் தவாக்கினியால் சுட்டெரித்துக் கொண்டு அவரவர்களுக்குள்ள குன்மநோய், குஷ்ட நோய் முதலிய பெருவியாதிகளையும் ஒரு வார்த்தையிலேயே ஓட்டிவந்தனர்.

இங்ஙனம் வீற்றிருக்கும் நாளிலோர் நாள் அருணையம்பதிக்கு அரசுரிமை பூண்டு ஆண்டுகொண்டிருந்த பிரௌட தேவன் என்பவன், சுவாமி தரிசனத்திற்குச் செல்லும்போது அந்தக்கோபுரவழியாய்சந்தவொலிகளுடன் வந்தான். எப்போதும் அருணகிரி நாதரைச் சூழ்ந்திருக்கும் பரிவாரங்கள் அப்போது அவனைக் கண்டு எழுந்து வந்தனஞ்செய்ய, துறவியர் இறையாகிய அருணகிரிநாதர் மட்டும், மாந்தர் வேந்தனைத் துரும்பென மதித்து விரும்பாது அருந்தவத்திருந்தார். அதுகண்டு அடங்காக் கோபங்கொண்ட அரசன், அருந்தவத்தினராய்ப் பெருங்குடிமக்களாலும் பேணிப் பூசிக்கப்படும் பெரியவராகிய அருணகிரிநாதருக்கு அபராதம் ஒன்றும் விதிக்கமுடியாதென்று அஞ்சி, ஆலயத்துள் சென்று அண்ணாமலையீசரையும், உண்ணாமுலையம்மையையும் கண்ணாரக் கண்டு திரும்பும்போது, இரும்பெனும் நெஞ்சத்தோடு இழிவான நோக்கத்துடன் அருணகிரியாரைப் பார்த்துக்கொண்டே அப்புறமகன்று அரண்மனையடைந்தான்.

அறந்தான் இயற்றுமவனிலும் கோடி யதிகம் இல்லம்
துறந்தான் அவனில் சதகோடியுள்ளத் துறவுடையோன்
மறந்தான் அறக்கற்று அறிவோடு இருந்து இருவாதனையற்று
இறந்தான் பெருமையையென் சொல்லுவேன்கச்சி ஏகம்பனே

என்பது முதலாம் பொன்னது போன்ற பொருள் கொண்ட வாக்கியங்கள் தேக்கிநிற்கும் உண்மையின் போக்கை அறியமாட்டாது அவமதித்த அரசனுக்கு அன்றையதினமே ஆகாத சுரநோய் கண்டது. அரை வைத்தியமும் அறியாதபோதிலும் அகில முழுவதும் பிரபல பண்டிதரென்று பெயர்பெற்று வியாதியின் தன்மையும், வேதனையின் விவரத்தையும் விகசித்து உணரமாட்டாத உதவியில்லாத வைத்தியர், ஊர்முழுவதும் எங்கெங்கும் அதிர்ஷ்டவசத்தால் அவுஷதங்கள் வைத்துக்கொண்டு பவிஷுடன் திரிகிறார்களானலும், அரசனுக்குச் சுரமிருந்தபோது அத்தகையோரைத் தேடவேண்டிய அவசியமில்லை யாதலால், ஆலோசனை கூற ஐம்பது பண்டிதர்களும், அனுபானங் கூற ஐம்பது பண்டிதர்களும், அவுஷதங் கொடுக்க அரும்பெரும் பண்டித னொருவனுமாக நூற்றொரு வைத்தியர் அருகில் வந்து சேர்ந்து சிகிச்சை செய்யலானார்கள். ஆயினும், நோய் நாழிகை தோறும் அதிகரித்துக்கொண்டே வந்ததல்லால் குறைந்தபாடில்லாமை கண்ட அமைச்சன் அரசனை நோக்கி, "அண்ணலே! ஓர் விண்ணப்பம். திடீரென்று உமக்குத் தோன்றிய கொடிய ரோகமானது தெய்வகோபத்தால் உண்டானதென்று ஊகித்து அறிகிறேன்" என்றான்.

"ஏன் ?" என்று கேட்டான் பிரௌடதேவன்.

"சுப்ரமணிய உபாசகராய் இப்பிரபஞ்சத்தில் தோன்றியிருக்கும் அருணகிரிநாதர் என்னும் மகானை அவமதிப்பாய் நோக்கியநோக்கம் இத்துக்கத்திற்குத் துணையாய் நின்றது" என்றான் அமைச்சன்.

"அவமதிப்பாய் நோக்கியது உண்மையே !" என்றான் அரசனும்.

"ஆதலால் அப்பெரியவரிடமிருந்து விபூதிப்பிரசாதம் பெற்றுக்கொண்டால் உம்வினை தீர்ந்துபோம். அதைவிட்டு ஆயிரக்கணக்கான பண்டிதர்களிடம் அவுஷதம் சாப்பிடுவதினால் துன்பம் அதிகரிக்கிறதே யொழிய வேறில்லை கண்டீர் !" என்று அறிவில் மிகுந்த அமைச்சன் சொன்னபோது. அரசனும் இணங்கினான்.

ஆகவே, அவர்கள் இருவரும் கவரியிரட்டுவார் முதலானோருடன், அருணகிரிநாதர் அமர்ந்திருக்குமிடத்திற்குஅருகிற்சென்றவுடனே, அரசனுக்கு ஆராமை மேலிட்டபடியால் அவன் அன்பு மிகுந்து அஷ்டாங்கம் நிலந்தோய சாஷ்டாங்க தெண்டனிட்டு "அடியேன் குறைகளை இறையவர் பொறுத்தருளல் வேண்டும்" என்று கெஞ்சிக்கிடந்தான்.

"கந்தக்கடவுள் எந்தவினையும் தீர்த்தருளுவார். சிந்தையொன்றி இந்த பூதியை அணிந்துகொள்" என்று திருநீறளித்தார் அருணகிரிநாதர். அரசன் அதை வாங்கி அணிந்துகொள்ளும்போதே அவனு

டைய சுரநோய் தீர்ந்தொழிந்தது. அன்றுமுதல் பிரௌடதேவன் அருணகிரிநாதர்மீது அன்பும் ஆசையும் மிகுந்து அடிமைத்திறம் பூண்டிருந்தான். அவர் திருப்புகழ் கேட்டலே அவனுக்குப் பேரானந்தம் தந்தது. ஆதலால், அடிக்கடி அவரைச் சேவித்து வருதலினும், அவர் வண்ணங்களைக் கேட்டு மகிழ்தலினும், அவருக்குவேண்டிய வசதிகள் அமைப்பதிலுமே மிகக் கருத்துள்ளவனாயிருந்தான் திருத்தமிகுந்த தீரனாகிய பிரௌடதேவன்.

---

## ௧. வில்லியுடன்விளைந்த சொல்லரும்வாதம்

எங்கும் புகழ்பரப்பிய கொங்கர்கோன் நாட்டில் **வில்லிபுத்தூரர்** என்னும் பெயருடைய வைஷ்ணவரொருவர் ஆஸ்தான வித்துவானாயிருந்து பெரும்புகழடைந்தார்.

"குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டிய னீங்கில்லை
குறும்பியளவாக் காதைக் குடைந்து தோண்டி
எட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை
இரண்டொன்றாத் தலைமுடிந் திறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவி ஒட்டக்கூத்த னில்லை
விளையாட்டாக் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ அறிவிலாத் துரைக ளுண்டு
தேசமெங்கும் புலவரெனத் திரிய லாமே"

என்னும் பாட்டின் கருத்துப்படி, குறில், நெடில் அறியாதாரும், கொன்றை வேந்தனுங் கல்லாதாரும் இக்காலத்தில் வித்துவான், மகாவித்துவான், சமஸ்

தான வித்துவான், பாவலன், நாவலன், அஷ்டாவ தானி யென்று பட்டப்பெயர்களைத் தாமாக வைத்துக்கொண்டோ, அல்லது, தம்மைப்போன்றார் சிலருக்குத் தாமே சொல்லி வைக்கப் பெற்றுக் கொண்டோ, பிரபலக் கல்விமான்கள்போல் கேட்பாரில்லாமல் திரியும் பகட்டு, வில்லிபுத்தூராழ்வார் காலத்தில் முடியாது.

இவர் ஒவ்வோர் ஊருக்குஞ் சென்று ஆங்காங்கு வித்துவான்களென்று பெருமைப்படுத்திக்கொள்ளும் பேரறிவாளரை யெல்லாம் எதிர்த்து அவர்களோடு வாதப்போர் செய்து ஜெயித்துத் தோற்றவர்களுடைய காதுகளைத் தமது கையில்கொண்ட துறட்டுக் கோலினல் அறுத்துக் கொண்டு திக்கு விஜயஞ் செய்துவந்தார்.

அநேக ஊர்களில் வெற்றி பெற்று, அருணகிரியாரைப்பற்றி யறிந்ததும், கண்மணிகள் போன்ற அவர் வண்ணப்பாடல்களைக் கேட்டு எண்ணம் மாறிப் பொறாமை கொண்டு "அழுக்காறு என்னும் ஒரு பாவி திருச்செற்று, தீயூழி உய்த்துவிடும்" என்று,

"சமயக் கணக்கர் மதிவழி கூறாது
உலகியல் கூறிப் பொருளிது வென்ற"

எள்ளலில் புகழின் வள்ளுவனார் வாக்கின் வாய்மையையும் தேராமல், அருணகிரி நாதருடைய அரும் பாக்களில் குற்றமுள்ளதாகக் கற்பிதமாய்ப் பற்பலருக்குஞ் சொல்லிக்கொண்டு தமது துவேஷபுத்தியையும் சிறுமையையும் அறியக் காட்டிவந்தார்.

உள்ளதை யில்லதென்றும், இல்லதை யுள்ள தென்றும் துச்சமாய்க் கூறி இச்சகம் பேசுவதென்றால் நான் முன்னே, நான் முன்னே யென்று அனேகர் அவாக்கொண்டு சவால் போட்டு இக்காலத்திலும் வருகிறார்கள்.

" போற்றினும் போற்றுவர் பொருள் கொடாவிடில்
தூற்றினும் தூற்றுவர் சொன்ன சொற்களை
மாற்றினும் மாற்றுவர் வன்க ணாளர்கள்
கூற்றினும் பாவலர் கொடிய ராவரே "

என்னும் பாட்டின் கருத்து எட்டைவிட்டு அனுபவத்தில் இயைந்திருத்தல் எவரும் அறிவார்கள்.

" குற்றமே தெரிவார் குறுமாமுனி
சொற்ற பாவினும் ஓர்குறை சொல்வரால் "

என்றபடி, சந்தனப் பொதியத்து அந்தணன் வாக்கிலும் ஆபாசம் உள்ளதென்று அறுதியிட்டுரைப்பார் பலரிருக்கிறார்கள். இவர்கள் தம்மைக் கௌரவப் படுத்திக் கொள்வதற்காகவும், தாம் முற்றக்கற்ற முதல்வர் என்று பிறர் தம்மைப் புகழவேண்டியும் ஒன்றுக்கொன்று சொல்லி அனர்த்தஞ் செய்து மாளாச் சண்டையில் மாண்டொழிகிறார்கள்.

" அறிவ தறிந்து அடங்கி அஞ்சுவ தஞ்சி
உறுவ துலகுவப்பச் செய்து—பெறுவதனால்
இன்புற்று வாழும் இயல்புடைய மாந்தர்கள்
துன்புற்று வாழ்தல் அரிது "

" கற்கக் கசடற கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக "

“கற்றதுங் கேட்டதுந்தான் எதுக்காக
கடபடவென்று உருட்டுவதற்கோ கல்லால் எம்மான்
குற்றமறக் கைகாட்டும் குறிப்பைக் கண்டு
குணங்குறி யற்று இன்பநிட்டை கூடவன்றோ”

என்பது போன்ற ஆப்த வாக்கியங்களைக் கற்றும் பிறருக்கு உபதேசித்தும் தாமே அந்நீதி மொழிகளுக்கு இணங்க நடவாமல் அநீதஸ்தர்களாய்க் “கட்டிச் சுருட்டித் தங்கக்கத்தில் வைப்பர் கருத்தில் வையார்” என்பதுபோல் புத்தகக் கட்டுகளைச் சுமந்துதிரிந்து அறிவென்பது இல்லாமல் புத்தகப் பூச்சிகளாய் ஏட்டுச் சுரைக்காய்க்கு ஒரு நீதியும் வீட்டுச்சுரைக்காய்க்கு வேறு நீதியுமாக நடந்து கொள்ளுகிறார்கள். இவர்களே கற்றறி மூடர் எனப் படுவார்.

“தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு”

என்றார் பொய்யாமொழிப்புலவர். மணற் கேணியானது எவ்வளவு ஆழமாகத் தோண்டுகின்றோமோ அவ்வளவு நீரூற்றுடையதா யிருக்குமாப்போல் மாந்தரும் எத்தனை நூல்கள் கற்கிறார்களோ அத்துணை அறிவாளிகளா யெண்ணப்படுதல் தகுதி. இதற்கு மாறாகப் படிக்கப் படிக்க அறிவு குன்றுவாராகில் அவரை யாவரே அன்போடு மதிப்பார்.

“கல்லாதபேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்
கற்றும் அறிவில்லாத என்கர்மத்தை என்சொல்வேன்”

என்ற தாயுமானவர் வாக்கை நோக்குங்கால் கல்வியி னும் மேம்பட்டது அறிவு யென்பது தெற்றென விளங்கும். "மடம்கொன்று அறிவு அகற்றும் கல்வி" என்ற இடத்தும் இக்கருத்தையே பெற்றும்.

"ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்"

என்றது ஆன்றோர்களேத்தும் அருமறைச் செந்நாப் போதார் ஊன்றி யுரைத்த உயர் திருவாசகம். இவ் வாசகப்படி நடந்தொழுகுவோரே நல்லோர்களென் றும், அல்லாதார்கள் பொல்லாதவரென்றும் பேசப் படுவார்.

கல்விச் செருக்கினல் தருக்கித் தமிழ்நாடு முழுவ தும் திக்கு விஜயஞ்செய்த தீரரான வில்லிபுத்தூரர் கூறும் விபரீத மொழிகளைக்கேட்ட பிரௌடதேவன் இவரையும் அருணகிரி நாதரையும் வாதிடச் செய்ய வேண்டுமென்ற விருப்பங்கொண்டு அவர்களிருவரை யும் பொருத்தமாக இருத்தித் தான் திருத்தமாய்ச் சபா நாயகனுக வீற்றிருந்தான். இருவரும் அநேக நாட்களாக ஏதேதோ வாது புரிந்தும் ஈது முடி வென்று கண்டார்களில்லை யாதலால், அரசன் ஓர் யுக்தி சொல்லலுற்றான். அதாவது "எம்மண்ணல் அருணகிரிநாதர் நூதனமாக ஓர் பிரபந்தம் பாடிக் கொண்டே வருவர், அதற்கு நீவிர் வில்லிபுத்தூரர் உடனுக்குடன் பாக்களுக்கு உரைகூறி வருதல்தகுதி. இதில் எவர் பின்வாங்குகிறரோ அவர் தோற்றவரா வார்" என்றான். அதற்கு அவர்கள் இருவரும்

ஒருப்படவே அருணகிரிநாதர் கந்தரந்தாதி யென ஒரு பிரபந்தம் பாட ஆரம்பித்தார். வில்லிபுத்தூராரும் ஒவ்வொரு கவியையும் கேட்கும்போதே பழம்பாடத்திற்கு உரையெடுத்துச் சொல்லுவதுபோல் வியாக்கியானஞ் செய்துகொண்டு வந்தார். இப்படி ஐம்பது கட்டளைக் கலித்துறைகள்மட்டும் ஆகிவிட அருணகிரிநாதர் தமது பாடல் ஒவ்வொன்றிற்கும் வில்லியார் தட்டின்றி உரைகூறி வருதலைக் கண்டு அஞ்சி ஓரெழுத்தாலாகிய பாட்டொன்றை வெகு சமத்காரமாய்ப் பாடினார். அப்போது அப்பாட்டின் பொருள் தெரியாது வில்லியார் விழித்தார்.

"மயக்கமேன்?" என்று கேட்டான் மன்னவன். "இஃதோர் பொருளுடைய பாட்டாகத் தோற்றவில்லை. வாய்க்கு நேர்ந்தபடி கருத்தில்லாமல் பாடிய பாட்டாகும் இது. அப்படி யல்லேயேல், அவரே இதற்கு உரை சொல்லட்டும், நான் தோற்றவனாகிறேன்" என்றார்.

அரசன் அருணகிரிசுவாமிகளை வேண்டவும் அவர் திரும்பிப் பார்த்து "குமாரசுவாமி!" என்று கூப்பிட்டார். அப்போது தமிழ்த் தெய்வமாகிய தணிகாசலக்கடவுள் பத்து வயது கொண்டதோர் பாலன் உருவுகொண்டு சபையில் தோன்றி ஞாலமதிக்க அப்பாடற்கு சாலப்பொருள் விரித்துச் சங்கடந்தீர்த்துப் போயினார். அருணகிரிநாதர் அவ்வந்தாதியின் மற்றைப்பாடல்களையும் பாடிமுடிக்க வில்லியாரும் உரை சொல்லிக்கொண்டே வந்தார். கந்தரந்தாதியும் முடிவு

பெற்றது. அரசன் நடுவு நிலைமையுடன் வில்லிபுத்தூ ராழ்வாரே தோற்றவர் என்று ஏற்படுத்தியதன்மேல் அவருடைய துறடையும், விருதுகளையும் அருணகிரி நாதர் பற்றிக்கொண்டார்.

சாந்தகுண சீலராய் எந்துவார் கைப்பிள்ளை போல் இருக்கவேண்டிய யோகாத்மாவாகிய அருண கிரிநாத ரிங்ஙனம் போகாத்மாக்கள்போல் ஆகாத காரியம் ஏன் செய்தாரென்ற ஆசங்கை சிலருக்கு உண்டாகக்கூடும். அதற்குச் சமாதானம் இதமாய்ச் சொல்லுகின்றோம். வில்லிபுத்தூரர் மகா கொடிய வைணவர், அவர் சைவாலயங்களைக் காணுதலும் பாபமென்று கொண்டவர். இவ்வித கொடிய அபிப் பிராயமுள்ளவரை வென்றதனால் அருணகிரிநாதர் அவருக்குப் புத்தி புகட்டவேண்டு மென்னுங் கருத்து டையவராய், துவேஷபுத்தியை மாற்றிச் சிவபரமாய் ஓர் நூல் செய்யவேண்டுமென்று வருத்தினார். அவர் ஆக்கினைக்கு இயைந்து, அரபரமாகவே ஆதிமுதல் அந்தமளவும் விளங்கும் நூலொன்றைச் செய்ய மன மில்லாராய் ஒரோவிடங்களில் அவனுடையபுகழ் அறி யக்கிடக்கும் ஸ்ரீமகாபாரதத்தை விருத்தப்பாவா னியற்றினாரென்ப. இது வில்லி பாரதமென்று வியந் தோதப் பெற்று விளங்குகிறது.

## க. மதவாதிகட்கு இதமுரை மொழிகள்

* "முற்காலத்தில் அவசரபேதத்தால் எவ்வெவை நடந்திருப்பினும், தற்காலத்தில் மததூஷணை யென்பது மிருகசேஷ்டைக்கு ஒத்ததாயிருக்கிறது. இப்படி ஒருவருக்கொருவர் கலகம் விளைப்பது எதில் என்று யாம் ஆலோசிக்குங்கால், திருமண் இடுவதும் விபூதி பூசுவதும் விஷ்ணு என்பதும் சிவன் என்பதும் ஆகிய வெளிப்பகட்டு விஷயங்களிலும், வாக்குக்கும் மனதுக்கும் எட்டாத விவகாரங்களில் சொற்போர் புரிந்து புஸ்தகப் பூச்சியே யென்ன யுக்தி அநுபவங்களை அறவேவிட்டு, சொன்னதைச் சொல்லும் கிளிப் பிள்ளையினும் குணங்கெட்டு, அடங்காப் பிடிவாதம் பூண்டு தம் பிடிவாதத்திற்கேற்கச் சுருதிகளைக் கையாண்டு தம்தம் மனம்போன போக்கெல்லாம் போவதிலும் என்று நன்ருய்த் தெரிகிறது. புத்திபோயொழிந்தது, அவிவேகம் அரசாள்கிறது. பிடிவாதம் மேலிட்டது, முட்டாள்தனம் முதன்மையாய் நிற்கிறது. திருமண்தான் விசேடம் என்பார் ஒருசிலர், பூதிதான் புனிதமானது என்பார் வேறுசிலர்; ஒருவர்க்கொருவர் நிந்தையாகிற சேற்றைப் பூசி நீசத்தனம் அடைகிருர்களே யன்றி, பக்தியாகிற பயிரைச் செழிப்புறச்செய்து பரிபக்குவமடைய வழி தேடுகிருர்களில்லை. சிவனைச் சண்டாள னென்றும் அவனை வழிபடுவோர்களைப் பாஷண்டர்களென்றும்

* ஸ்ரீமான் திரு. பக்தவச்சலம்பிள்ளை பி.எ., ஸ்ரீகிருஷ்ண சைதன்ய சரித்திரப் பாயிரம்.

கூறி, வகைகெட்டொழிவார் வைணவப் பதர்கள்! தடிராமனென்றும் சாப்பாட்டுராமனென்றும் வைது வாயழுகிப்போவார் சைவச் சாம்பிராணிகள். தமிழறியும் பெருமாளிடம் அமிழ்தினும் இனிய தமிழ்மொழி பகர வந்தோர் வழியில் காணும் விநோதங்களில் காலங்கழித்துத் தாம் உத்தேசித்த காரியத்தை ஒழித்து விழித்ததுபோல், இம்மதவைராக்கியர்களும் தம்மாலாகாத காரியத்தில் தலையிட்டுக்கொண்டு ஆத்துமோஜ்ஜீவனத்தில் லக்ஷியம் வையாது, மருண்டு உருண்டு போகிறார்கள்."

* "யாவரும் யாவும் சிவமாய் விளங்கும் எமக்கு. யாவரும் பெரியோரெமக்கு. அந்நியன் பத்நி தாயே யெமக்கு. வேசைத் தாசியும் சோதரியே யெமக்கு. எம்மனோர் வேசையைக் கடாக்ஷிப்பாரேல், அன்றே, அப்பொழுதே, அக்கணமே அவள் முமுக்ஷுவாய் நிற்பள். யாங்கள் படிப்பன யாவும் பரசிவமந்திரம். யாங்கள் கருதுவ யாவும் நாராயணவடிவம். யாங்கள் காண்பனயாவும் எம்பெருமான் கண்ணன் திருக்கோலம். யாங்கள் சாம்பவ மணிகளைக் காணில் அடியேம் சைவரென்போம். யாங்கள் ஸ்ரீபாகவத சிரோமணிகளைக் காணில் யாங்கள் வைஷ்ணவ பாததூளியே யென்றன்புட னுறைவோம். யாங்கள் மகமதியப் பெரியர்குழாம் சேரும் பள்ளிவாசலைக் கண்டால் சிவ சிவ வென்பம். கிறிஸ்துவ ஸ்திரீ புமான்கள் குழீஇ இருந்த கிறிஸ்துவ தேவாலயங்களைத் தெரிசிப்போ

* ஸ்ரீமான் வி. முத்துக்குமாரசாமி முதலியார் பி. எ., ௲மரசஞான சந்திரிகை.

மாஞல், ஹரி ஹரி என்பம். பிரஹ்மாகாரத்தை யாண்டும் எவரிடத்தும் தரிசியாநிற்பம். சர்வம் விஷ்ணுமயம் ஜகத். சர்வம் சிவமயம் ஜகத். ஏகமே வாத்விதீயம் பிரஹ்மஃ சத்யமேவ ஜயதே !

"மதத் துவேஷத்தினைப் போக்கிச் சமரச நிலை தேக்கி நமதுநாட்டிலுள்ளோர் ஒவ்வொருவரும் மேற்படி வசனங்களைத் தங்கள் மனமாரச்சொல்லி யொழுகுகிற நாள் கிட்டுமட்டும் நமக்கு உய்வில்லை ! உய்வில்லை !! சிவனுக்குப் பரத்துவங் கூறுவதினல் கைலாய வாசம் கிட்டுமென்றும், விஷ்ணுவுக்குப் பரத்துவங் கூறுவதனல் பரமபதப் பிராப்தியுண்டாகுமென்றும் கண்டார் போலக் கதறிக் கதறிக் கட்டழிந்து கெட்டொழிவர் அறிவு இல்லாக் கசடர்கள்.

" பொய்விளக்கப் புகுகின்றீர் போது கழிக்கின்றீர்
புலைகொலைகள் புரிகின்றீர் கலகலவென்கின்றீர்
கைவிளக்குப் பிடித்தொரு பாழ்ங்கிணற்றில் வீழுங்
களியரெனக் களிக்கின்றீர் கருத்திருந்துங் கருதீர்
ஐவினைக்கு மூப்பு மரணதிகளை நினைத்தால்
அடிவயிற்றை முறுக்காதோ கொடியமுயற்றுலகீர் "

என்னும் தராதலம் போற்றும் இராமலிங்கேஸ்வரர் வாய்மொழிக்கு இலக்கியமாய்த் திரிவார் அநேகர். இங்ஙனங் கூறுவோர்களையும் புண்ணியக் குறைவுடையார் என்பர் வெகுபேர். தமது கொள்கைக்கு மாறுகப் பேசுவோர் அறியாமை மேற்கொண்டுள்ளாரென்றும் தாம் அறிவே வுருவாய் அமைந்திருப்பதாகவும் சொல்லிக்கொள்வார் அநேகர்.

"வைணவ நூல்களைத் தவிர்த்து வேறு புஸ்தகங்களை வாசித்தல் பாபமென்பர் பண்புணராப் பாகவதர்கள். சைவ நூல்களைப் படிக்கச் சீவியகாலமும் போதாதே. அவைகளை விட்டு அன்னியமத நூல்களை என்னையோ கைப்பற்றினீர் என்பார்கள் சோம்புதலுடைய சாம்பவர்கள். பிறநூல்களைப் படித்தன்றோ பீடழிந்தும் போனீர் என்பர் சிலர். வைணவ மதமிதுவென்றறிந்தீரோ, மற்றை நூல் படிக்கப் புகுந்தீரே என்று சொல்லுவார் எண்ணிலாப் பெரியோர். சைவமீதென்று தெளிந்த பின்னன்றோ மற்ற மத நூல்களைப்பற்றிப் படிக்கவேண்டும் என்று தகுவதறியாத சில சைவர்கள் சொல்வார்கள். வேறு சிலர் சர்வமும் அறிந்த சர்வக்ஞர்போல் நடிப்பார்கள்; அவர்களோ உண்மையில் நிரக்ஷரகுக்ஷிகளாவர். அவர்கள் குக்ஷியைக் கிழித்துப் பார்த்தாலும் ஓரக்ஷரம் கூடப் பார்க்க முடியாது. ஞானிகள்போல் பேசுவார்கள். திருப்பிக் கேட்டால் பதில் சொல்லத் தெரியாமல் விழிப்பார்கள். இப்படியும் கேழ்க்கலாமா? புண்ணியக் குறைவினால் இன்னணம் புகன்றாய் என்பார்கள். 'வழக்கம் பழக்கம்" என்று வாதாடி நிற்பார்கள். உங்கள் கண்மூடி வழக்கமெல்லாம் மண்மூடிப் போகாதாவென்றால் "சிவ! சிவ!! ஹரி! ஹரி!!" என்று காதைப் பொத்திக்கொள்ளுவார்கள். அறிவிற்கும் சிந்தனைக்கும் இடங்கொடாத உமது வழக்கங்கள் மிக அழகியவே என்றால் இங்கிலீஷ் படிப்பாலும் கிறிஸ்துவ சகவாசத்தாலும் கெட்டீர், கெட்டீர் என்பர். நாங்கள் கெட்டோமென்று நீர் சொல்லுகிறீர். நீங்

கள் கெட்டொழிந்ததை நாங்கள் கண்கூடாகக் கண்டோம் என்று சொல்லும்போது "கலிகாலக் கொடுமை!" என்று சொல்லிப்போவர்.

"சாதியிலே மதங்களிலே சமயநெறிகளிலே
சாத்திரச் சந்தடிகளிலே கோத்திரச் சண்டையிலே
ஆதியிலே அபிமானித்து அலைகின்ற உலகீர்
அலைந்தலைந்து வீணேநீர் அழிதல் அழகலவே"

என்று கட்டுரைகூறிய கனவான் சொல்லில் எவ்வளவு உண்மையுள்ளதென்று சிந்தனையொன்றித் துவேஷ புத்தியை மாற்றி நடுநிலையுடன் ஆலோசிப்பதென்றால் தலைநோய். ஆரவாரஞ்செய்து, ஊர் முழுவதையும் மதக் கலகத்தினாலும் ஜாதிக் கலகத்தினாலும் கலக்குவதென்றால் பாலுஞ் சோறும் பருகுவதுபோல் பரம சந்தோஷம்.

"சமரச ஞானமென்பது வெகு சிறிதுமின்றி தாம்தாம் கொண்ட எண்ணத்தைச் சாதிக்கவே கங்கணங்கட்டி விருதுகூறி அல்லாசாமிப் பண்டிகையில் அதமர் சவாலிடுவதுபோல், அங்குமிங்கும் அல்லல் விளைக்கும் அன்பர்களே! சிறிது செவி சாய்த்துக் கேண்மின்! 'உலகத்திலுள்ள ஜீவராசிகளில் நாமே நல்லறிவாளர். நாமே சர்வ ஜீவ தயாபரக் கொக்குகள். நாம் பிறந்த இடமே சர்வோத்தமமான ஸ்தானம். நாம்தாம் உண்மையில் கடவுளை நேசிப்பதும் விஸ்வாசிப்பதும். கடவுள் குழந்தைகளென்பார் நாமே! அவர் அருள் புரிவதும் நமக்கே! நம்முடைய சாஸ்திரமே உண்மைச் சாஸ்திரம். நாம்



பெறும் பதமே பரமபதம் ! மற்றையோர் அஞ்ஞானிகள், அவிவேகிகள். அவர்கள் புத்தி உலக்கைக் கொழுந்தே ! அவர்கள் கடவுளின் குழந்தைகளல்லர்! பிசாசின் குழந்தைகள் ! அவர்கள் அதமர் ! அவர்கள் மிலேச்சர் ! அவர்கள் நூல்கள் பொய்நூல்கள் ! அவர்களடையப்போவது நரகமே' என்று பலவாறு ஒவ்வொரு தேசத்திலுள்ள ஒவ்வொரு மதத்தினரும் தம்மைத்தாம் புகழ்ந்தும் மற்றையோரை இகழ்ந்தும் போதருவார். இதைவிடக் கர்வங்கொண்டதும், முட்டாள்தனமானதும், முறைமை கெட்டதுமான அபிப்பிராயம் வேறொன்றுங் கிடையாதென்றும், புத்திசாலிக ளொருவரும் அதற்கு இடங்கொடார் என்றும் அதி விவேகியான ரஸ்கின் துரையவர்கள் கூறுகிறார்.

" வைணவ மதத்தில் பிறந்துவிட்டதனாலேயே வைணவம் பெரிதென்றும், சைவமதத்தில் பிறந்துவிட்டதனாலேயே சைவம் பெரிதென்றும், அவரவர் தம்தம் பெருமை கூறுவதன்றித் தாம்தாம் கொண்ட மதம் தவிர மற்ற மதங்கள் உபயோகமற்றவை யென்றும், உளறி ஊர்ப்போரெல்லாம் விலைக்கு வாங்கிக் கொள்வார் எத்தனையோபேர். இது சுத்தப் பிசகான எண்ணம். நன்மதியாளரே ! இற்றை ஞான்றே, இத் துன்மதியை ஒழித்து விடுங்கள் ! ஆரவாரம் ஒழித்து அடக்கத்தையே ஆபரணமாய் அணியுங்கள்! சண்டை விலக்கிச் சமாதானங்கொள்ளுங்கள் ! கிருஷ்ணனாய் ஓரிடத்தில் கடவுள் அவதாரஞ் செய்வாராயின், கிறிஸ்துவாய் மற்றோரிடத்தில் அவர் என்

தோன்றுதல் கூடாது? கிறிஸ்துவாய் ஓரிடத்தில் தோன்றுவராயின் கிருஷ்ணனாய்ப் பிறிதோரிடத்தில் விளங்கலும் அமையுமே! எம்மதமும் நமக்குச் சம் மதமே! பல ஜாதியார்களையும் பல மதத்தார்களை யும் நாம் ஒப்பு வித்தியாசம் நோக்கிப் பரிசோதித்த லில், அவர்களிடம் ஒரு மேன்மை காணலாகும். அஃது நம்மிடம் தோன்றாதிருக்கவும் கூடும். அல் லது நம்மிடம் ஒரு நன்மை தோன்றும். அது அவர் களிடம் காணுதிருத்தலும் கூடும். இப்படியே, புரா ணத்திற் கூறிய அன்னத்தைப் போன்று பாலைக் கொண்டு நீரைப்போக்கிப் பண்படைவதே ஒவ்வொரு வர் நோக்கமாய் இருத்தல்வேண்டும். பட்சபாதமில் லாத பரமதயாளனுக்கு, எல்லோரும் குழந்தைகளே! எல்லோர் சுகத்திலும் அவனுக்குச் சமநோக்கே காணப்படும். அவ்வத்தேசத்தார் அவ்வந்நிலைமைக் கேற்றவண்ணம், ஆங்காங்கே அண்ணலும் தோன்றி அருள் புரிகின்றாகை, ஒன்றை யொன்று இழித்துக் கூறுதலும், பழித்துப் பேசுதலும் பாவத்திற் கிடமே.''

---

## ம. சம்பந்தாண்டான் வம்பொன்றுற்றிடல்

இவ்வாதத்தின் பின்னர், அருணகிரி நாதரை முன்னைவிடப் பின்னையும் அதிகமாய் முனிவுடன் போற்றிப் புரந்தான் பிரௌட தேவன். அவர் யாத்திராபிலாஷை கொண்டவராய் அருணை நகரை அகன்று திருச்செந்தூர், பழநி, திருத்தணிகை முத

லாகிய சுப்பிரமணிய நற்பதிகளுக்கும் மற்றுமான ஸ்தலங்களுக்கும் போய், அவ்வவ்விடங்களிலுள்ள கந்தக் கடவுளை சிந்தையொன்றித் துதித்துத் திருப்புகழ் விருப்புடன் பாடித் திரும்பிவந்தார். சதானந்த மளிக்கும் சாக்ஷாத்கார சொரூபனாகிய சண்முகப் பெருமானை உண்முகத்திற்கண்டு திண்மையுள்ள தியானம்பண்ணித் தீமைதீர்ந்தார் அருணகிரியார். அவருடைய அந்திய காலத்தைப் பற்றிய கதைகள் இரண்டு கர்ணபரம்பரையாய் வழங்கிவருகின்றன. அவை பின் வருமாறு.

**சம்பந்தாண்டான்** என்னும் பெயருடைய துன்பந் தீராரொருவன், தொல்லையாம் அருணை நகரில் தோன்றிப் பலவிதமாய் அருணகிரி நாதரைத் தூற்றி வந்தான். அரசனாலும் அன்பொடு பராமரிக்கப் பட்டு வந்த இவன், ஒருநாள் பிரௌட தேவனை நோக்கி "அரசே! விரைசேர் கூந்தல் விண்ணவர்க் கரசியாம் வேதநாயகி, தரைமேல் தோன்றித் தங்களுக்குத் தரிசனந் தந்தருளச் செய்குவேன். பாரோர் போற்றும் ஆறுமுகக் கடவுள் அருள்வலமுடையராகிய அருணகிரிநாதரை அவரது உபாசனாமூர்த்தமான சுப்பிரமணியரை அழைத்துக் காட்டச் செய்யும். அவர் சமத்து அறிவோம்" என்றான்.

"நன்று, நன்று, மிக நல்ல யோசனை செய்தீர். நானங்ஙனே காட்டச் செய்கிறேன். ஆனால் இஃதிருவருக்கும் ஓர் வாதம்போல் நிகழுவதால் தோல்வி வெற்றிக்கான நிபந்தனைகளும் ஏற்படுதல் தகுதி" என்றான் அரசன்.

"சரிதான். நான் என் பிரதிக்கினைப்படி ஜகதம்பிகையாகிய ராஜராஜேஸ்வரியை உமக்குக் காட்டாவிட்டால் என்னையும் என் குடும்பத்தார் எல்லோரையும் ஊரைவிட்டுத் துரத்திவிடுங்கள்" என்று சொன்னான் சம்பந்தாண்டான்.

இம்மொழிகளையெல்லாம் தம்முடையண்ணலாகிய அருணகிரிநாதருக்கு அறிவித்து, அவருடைய சம்மதமும் பெற்றுக்கொண்டு சம்பந்தாண்டானுக்கும் தெரிவித்ததில், அவன் தான் இன்ன நாளில் ஈஸ்வரியைக் காட்டுவதாகக் கூறிவிட்டான். அதுமுதல் அர்ச்சனை ஓமம், முதலியவற்றால் பூசித்துவந்ததினால், அம்பிகை அவைகளை அன்புடன் அங்கீகரித்தவளாய், அவனுக்குக் காக்ஷி கொடுத்தாள். அதுகண்ட சம்பந்தாண்டான் அக்கோலத்துடனே அவ்வூராளியாகிய பிரௌடதேவனுக்குத் தரிசனம் தரும்படி வேண்டினான். அம்பாள் அதற்கு இயையாமல் மறைந்து சென்றாள். அதன்மேல் சம்பந்தாண்டான் அரசனை நோக்கி "ராஜேஸ்வரா! நீர் பிரயாசைப்பட்டு அம்பிகைக்கு அடிமைபூண்டு உபாசனை செய்தாலல்லாமல் அம்பிகையின் தரிசனம் உமக்குக் கிடைக்காது" என்று சொல்லி விட்டான். இவ்வார்த்தைகளைக் கேட்டமாத்திரத்தில் அம்பாள் தரிசனங்காண அவாக்கொண்டிருந்த அரசனுக்கு அதிகமான கோபம் மிகுதியாய் எழுந்தது. ஆயினும் அவனை உடனே ஓர்வித உபத்திரவப்படுத்தலும் உசிதமல்லவென்றுகொண்டு, அருணகிரிநாதரை நண்ணி அடிபணிந்து நடந்த

விருத்தாந்தம் எல்லாம் நவின்று "ஒப்புயர்வற்ற சுப்பிரமணிய சுந்தரமூர்த்திகள் தரிசனம் சிந்தித்து வந்திக்கலாயினேன்" என முடித்தான். அவரும் அன்புடன் அருள்கூர்ந்து ஆங்கு நின்ற கல்தூணில் அமைக்கப்பட்டிருந்த அறுமுகக்கடவுளை மயிலேறிய திருக்கோலம் இருந்தவாறே காட்டுவதாகக் கூறிவிட்டு தமது நியதிப்படி அதுநிறைவேறுதற்கான வழிபாடு செய்தார். கண்கள் ஈராறுடையார் காக்ஷியளித்தாரில்லை. அருணகிரியார் இதை நோக்கிய அளவில துக்கமும் அவமானமும் ஒக்க வரப்பெற்று, ஊக்கமேலிட்டு ஊன்றிப் பார்க்கலாயினர். அப்போது கடவுள் காக்ஷிகொடாத காரணம் அவருக்குக் கண்கூடாய்த் தெரிந்தது. எங்ஙனமென்றால் தோல்வியுற்ற சம்பந்தாண்டான், எதிரியாகிய அருணகிரி நாதர் வெற்றியுறுமற் செய்யவேண்டுமென்று வேதநாயகியை வேண்டி நிற்கவே, பக்தி வலையில் படுபவளாகிய பரமகாருணி பகவதி அவனுடைய வேண்டுகோளுக்கு இணங்கிக் கோழிக்கொடியனாகிய குமரக் கடவுளைத் தன்மடிமீது வைத்துக்கொண்டு தன்னிருகைகளால் இறுகப் பிடித்துக்கொண்டிருந்தாள்.

உள்ளீட்டை உணர்ந்தவுடன் உத்தமப் பத்தராகிய அருணகிரியார் அயில்வேற் கரத்து அப்பனுக்கு உகந்த ஊர்தியாகிய மயிலினைத் துதித்துப் பதிகம் பாடினர். உடனே ஒயில்மிகுந்த மயில்வாகனம் மகாதேவியின் சன்னிதானத்தில் மகோன்னதமாய்த் தோகையை விரித்து வேகமாய் நடனஞ்செய்யத்

தொடங்கிற்று. இதுகண்ட தேவி ஆனந்தமேலிட்டு, அற்புத நடனப் பொற்புறு காக்ஷி உள்ள முழுவதும் கொள்ளைகொண்டபடியால், தன்னை மறந்துநின்றாள். சமயமறிந்த சங்கரி புதல்வர் செயலொழிந்திருந்த இயல் முற்றுமாறி, மயில்மீதேறி மன்றாடி நின்ற மகா அடியவரான அருணகிரி நாதருக்கு அருங்காக்ஷியளித்தார். அவர் அப்போதே அரசனை அழைத்துக் காட்ட அன்னவனும் அப்பெருங் காக்ஷி கண்டு ஆனந்தக் கடலுள் அமிழ்ந்தினன். அறுமுகப் பெருமானும் அந்தர்த்தானமாயினர்.

---

## கக. பாரிசாதத்தால் ஊறுவிளைதல்

கருணைக்கடலான அருணகிரியார் சம்பந்தாண்டான் துன்பமுறுவண்ணம் அவனை மன்னிக்கும்படி அரையனை பன்னிக் கேட்டுகொண்டமையால் அவன் தேசப் பிரஷ்டமடைந்து நீசத்தன்மை யுறாமல் தப்பினன். ஆயினும், அவன் பொறாமைக் குணமட்டும் போனபாடில்லை. சில நாட்களானதும் அவன் அரசனை மயக்கித் தன் வசப்படுத்திக் கொண்டவனாய் அருணகிரிநாதரைப் பாரிசாதமலர் கேட்கும்படி அவனுக்குக் கற்பித்தான். அரசனும்மயங்கி அப்படியே கேட்க அவரும் கொண்டுவந்து கொடுப்பதாக ஒப்புக்கொண்டார். பின்னர் தமது உடலைக் கோபுரத்தின்மேல் ஓர் பத்திரமானஇடத்தில் மறைத்துவைத்து அங்கு உயிர்போய் வீழ்ந்துகிடந்த ஒருகிளியின் உடலில் புகுந்து பறந்து

சென்று இந்திரலோகம்போய் அங்கு சிங்காரமாய் வரவேற்கப்பெற்று அமிர்தபானம்பண்ணி பாரிசாத மலரைப் பெற்றுத் திரும்பினர்.

இதற்குள், சம்பந்தாண்டான் இவருடலம் கோபுரத்தின்மேல் இருக்குமிடம் அறிந்து போய்க்கண்டு, அரசன் முதலிய அனைவர்க்கும் காட்டிப் பாரிஜாத மலர் கொண்டுவரத்தக்க பண்பற்றுப் பிராணனைவிட்டார் என்று பிதற்றிப்பேசி, அத்தேகத்தை எடுத்துத் தகனம் செய்துவிட்டான். இக்கருமம் முடிந்ததும் ஊரெல்லா மொன்ருய்ப் பெருமணம் வீசுதலை யுற்றறிந்த ஒவ்வொருவரும் ஒன்றுந் தோற்ருது நிற்க, சிற்சிலர் கோபுரமீதிற் கிளியொன்று தன் மூக்கிலோர் மலர் கொத்தி வைத்துக்கொண்டு நிற்றலைக் கண்டு வியப்புற்று அரசனுக்கு அறிவித்தார்கள். அருணகிரிநாதரே பாரிஜாதமலர் கொணர்ந்தாரென்று ஐயமறக் கண்ட அப்பிரௌடதேவன் சிந்தை கலங்கி நொந்து வாடி சம்பந்தாண்டானுக்குக் கொலைத்தண்டனை விதிக்க நினைத்தான். இதை யறிந்த அருணகிரிநாதர் மதுமிகுந்த மலரை மன்னவனுக்குக் கொடுத்து மகாதுஷ்டனுயினும் சம்பந்தாண்டானுக்கு மரண தண்டனை மாற்றி மற்றை நாடு செல்ல அற்றையதினமே அகற்றுதல் தகுதியென்று பணித்தார். அரசன் அப்படியே செய்து அவர் ஆக்கினையால் அவனிருந்த இடத்தில் ஓர் அளாவிய தடாகமொன்று தோண்டியமைத்துச் சிலநாளிருந்து சிவபதமடைந்தான்.

---

## கஉ. அண்ணியாரம்மைகைக் கிளியாயமர்ந்தமை

அம்பிகை யடியவனொருவனால் தன்னுடலம் அழிந்தது பற்றி அக்கைநொந்துபட்ட அருணகிரிநாதருக்கு ராஜராஜேஸ்வரி தரிசனந்தந்து தேற்றித் தான் தன் கைக்கிளியர்யேற்று உலகமுள்ளளவும் எந்தி நிற்பதாகக் கூறி மறைந்தாள். அப்படியே அமிர்தபானம்செய்த அருமை விசேஷத்தால் அக்கிளியுடலத்துடன் இன்னும் அம்பிகையின் அழகிய கரத்தில் அருணகிரியார் கிளியாய் அமர்ந்திருக்கிறாரென்பது அனேகர் கட்சி.

---

## கஙூ. அவரியற்றிய அருநூல்கள்

திருப்புகழ் என்னும் திவ்விய நூலானது பல வகைப்பட்ட அருமையான வண்ணச் சந்தச்செய்யுள்கள் நிறைந்த வாரிதி யென்னத்தக்கது. இந்நூல் முழுவதும் சுப்பிரமணியப்பிரபாவம் பிரவாகித் தொளிர்கிறது. "திருப்புகழ் படிக்குமவர் சிந்தைவலுவாலே ஒருத்தரைமதிப்பதிலை உன்றன் அருளாலே" என்று மற்றநூல்களுக் கமையாப்பெற்றியுடன் விளங்குவதாகும் இந்நூல். இவரியற்றிய வண்ணங்கள் பன்னீராயிரம் என்று பகர்வரேனும் அவைகளில் அனேகம் அழிந்துபோயின. மறைந்துபோனவை யொழிய அறியக் கிடப்பனவெல்லாம் சிறிதுசிறிதாய் அச்சுவாகனமேறி அவனியிலுலாவி வருகின்றன. இப்

போது மூன்று பாகங்களாய் வெளிவந்திருக்கின்றன. கந்தரலங்காரம் கந்தரந்தாதி என்னும் இவையிரண்டும் கட்டளைக் கலித்துறைகளா லாயவையாய்க் கற்றோர்களாலும் மற்றோர்களாலும் கனப்படுத்தப்பட்டு வருகின்றன.

கந்தரனுபூதி யிலுள்ள 51-செய்யுள்களில் ஒவ்வொன்றும் ஒவ்வோர் சித்தியடைய முயல்வோர் ஓதிப் பயன் பெற அளிக்கும் ஒப்பற்ற பொருளினவாய் ஓங்கிநிற்கின்றது.

சீர் வகுப்பு, கடைக்கணியல் வகுப்பு, வேல் வகுப்பு, மயில்வகுப்பு, சேவகன்வகுப்பு, மயில்விருத்தம், வேல்விருத்தம் முதலியவெல்லாம் இவரியற்றிய சிறுநூல்களாம்.

இவர் முருகக் கடவுளிடம் முதிர்ந்த பக்தி கொண்டு, அவரையே பரம்பொருளாக வழிபட்டு வந்தாரென்பது இவருடைய பாக்களால் விளங்குகின்றது.

---

## கசு. முடிவுரை

நாம் எழுதிய தெழுதியாயிற்று. இச்சரிதம் உண்மையானதென்றும் அல்லவென்றும் ஆராய்ச்சி செய்தல் இக்காலத்து அழகிதல்லவாதலால் அதையறவே ஒழித்தோம். ஆங்கிலாபி விருத்தி மேம்பட்டு, அறிவுவழியே செல்லும் அருமையுடையராகிய இக்காலத்தவருக்கு அசம்பாவிதமான கதைக

ளாலும் சரித்திரங்களாலும் அருவருப் புண்டாதல் இயல்பே யாம். நமது நாட்டு வித்துவான்களோ அவர்களை அவிவேகிகளாக்கித் தமது விவேகத்தை விளக்க வெளிவரல், வெள்ளிரிப் பழத்திற்கு ஒள்ளிய வெள்ளிப்பூண் கட்டுவது போலிருக்கிறதே யொழிய வேறில்லை.

" உண்டதே உண்டும் உடுத்ததே உடுத்தும்
அடுத்தடுத்து உரைத்ததே உரைத்தும்
கண்டதேகண்டும் கேட்டதே கேட்டும்
கழிந்தன கடவுள்நாளெல்லாம் "

என்றபடி உள்ளதையே திருப்பித்திருப்பிச் சொல்லி இயற்கையாய் மானிடர்க்கு அமைந்துள்ள அறிவை யும் ஆராய்ச்சியையும் கெடுத்து விடுகிறார்கள்.

" கெட்டநாள் கெட்டாலும் கிருபையினிப் பாரேடா
பட்டநாள் பட்டாலும் பதமெனக்குக் கிட்டாதோ "

என்றாங்கு, போனதெல்லாம் போயொழிய இனி யேனும் இன்புறுதல் கருதித் தமிழ்ப்பாஷாபி விருத் தியும் அதனுடன் ஒக்க ஞானபிவிருத்தியும் செய்து, நல்லறிவுச் சுடர் கொளுத்த வேண்டுமென்னும் நன் ேனாக்கத்துடன் உழைத்து வரும் தழைத்த புகழி னார்க்கு இடையூறாய், இக்காலத்திய தமிழ்ப் பண்டி தர்களில் பலர் பழைய வழக்கங்களையும் அனுஷ்டா னங்களையும் குரங்குப் பிடியாய்ப் பிடித்துக் காலத்திற் கேற்ற விருத்திகளைக் கைப்பிடித் தொழுகாமல் தாமும் கெடுவதோடு தம்மொடு பலரையுஞ் சேர்த்

துக்கொண்டு கெடுத்துவருகிறார்கள். இவர்கள் தமது குறுகிய வாசிப்பாலும், அறிவாலும், போதனையா லும் தமிழ் நாட்டினரைக் கெடுத்து வருதலைக் காண, அந்தோ! கரணங்களும் இரண முறுகின்றன. அறி விற்கும் ஆராய்ச்சிக்கும் அணுவளவும் இடந்தராமல், அநாகரிக அறிவிலிகள் போல் கெட்டழிதல் அழ கல்ல வென்பதை, அறிவிற் சிறந்த ஆதிசேட அவ தார புருஷராய் அமர்ந்துள்ளோம் என்னும் அகம் பாவம் பூண்டு நிற்கும் அவிவேகிகள், இன்னும் அறி யாதிருப்பின், என்னகேடு நண்ணுமோ நாமுரைக்க கில்லேம். குற்றங் காணுமிடத்தில் குணங் தோன்றப் பெருமலும், குணங் காணுமிடத்தில் குற்றங் காணப் பெருமலும், இடருறும் மடமையுடையர் நம்மவருள் பலரென்பதை நாமுரைத்தல் நன்றுமென்றே நம்புகி ரோம். தம்மை யுயர்த்திப் பிறரைத் தாழ்த்தும் தகாக்குண முள்ளளவும் நாம் தகுதியுடன் மகிதலத் துலாவுதலில்லை, இல்லை. முக்காலும் இல்லை.

மற்று, சரிதங்களென்பனவே நம் பாஷையில் அரிதாய்விட்டன. உயர்வு நவிற்சியணியின் உபயோ கத்தில் ஒப்புயர்வில்லராகிய நம் பண்டிதர்கள் எழுதி வைத்தனவற்றிலும் சொல்லிவந்தனவற்றிலும் "கர்ண பரம்பரை, கர்ணபரம்பரை" என்று கட்டியழுகிற சட்ட மல்லாமல் திட்டமா யொன்றுந் துணிந்துரைக் கக்கூடவில்லை. புலவர் சரிதங்களும் புண்ணியர் சரி தங்களும் உண்மை முறையால் உலகோபகாரமாய் உரைத்தவர் ஒருவருமில்லை. எவர் எது சொல்லி

னும் நம்பி வந்ததாலும், நம்பி வரவேண்டுமென்று வற்புறுத்தியதாலும், நம்பாதாரை நாணயமுடனே நடத்தாததாலும் நாமிங்ஙனங்கடைப்பட்டநடைபட்டிருக்கிறோமென்னு முண்மையை, நன்னய முணர்ந்த நல்லறிவாள ரொவ்வொருவரும் சொல்லளவாகத் தொலைத்துவிடாமல், தொல்லை நீங்கிய பல்லமயத்தும் சிந்தித்திடுவரேல் நந் தமிழ்நாடு கந்தம் வீசி விந்தையுடன் வீற்றிலகும். ஆகையினால் அமிழ்தினுமினிய தமிழ்மொழி மக்களாய் தரணியில் தோன்றிய தன்யர்களெல்லாம் தமிழ்மாது அடைந்த தளர்ச்சி தீர, இற்றைப்பொழுதே ஒற்றுமைபூண்டு வேற்றுமையென்னும் நாற்றமகற்றி, நானிலத்தோர்கள் வானுலகளவும் கீர்த்தியுற்றொளிர்தல் ஆர்த்தியொடு தேர்ந்து மற்றையர் போன்ற பெற்றி யெத்திறமும் உற்று நாமெலாம் உய்யுமாறெழுகல் உன்னதமாகு மென்னும் இன்னய முணர்ந்து நாட்ட மிகுந்தவராய் வாட்ட மொழித்து வாழ்வோமாக.



# மதனரதி தத்வஞான பரமரகசியம்

## 22-தேகதத்துவ படங்களுடன் 12-காண்டங்களடங்கியது.

### இந்த சாஸ்திரத்தினுள் அடங்கிய விஷயங்கள்

தேகதத்துவங்களின் விபரம்
எலும்புகளின் விபரங்கள்
ஸ்திரீகளின் லக்ஷணங்கள்
புருஷர்கள் லக்ஷணங்கள்
பெண்களில் மூவகை ஜாதி லக்ஷணங்கள்
உத்தமமத்திப அதமஜாதிகள்
பெண்கள் பருவகாலங்கள்
இருதுகாலமும் அதற்குப்பலன்
ருதுவாகும் யோகங்களின்பலன்
பகலிரவில் ருதுவாகும் பலாபலன்
மாதர்கள் மாதவிடாயைப்பற்றி
பருவப்பெண்களின் பயன்
4-ஜாதிஸ்திரீகளை சேருங்காலம்
மூன்றுபருவப்பெண்களை கூடுங்காலம்
கிரமப் புணர்ச்சி
கிரமாதீதப் புணர்ச்சி [வமைப்பு
நாதமுதிக்கும்போதே இகபர
பொருத்தமுள்ள ஸ்திரீபுருடர்க
அதிகப்புணர்ச்சி செய்வதினால் [துன்பம்
மலடாவதேன்
விவாகவிதிவகை விவரம்
புருஷனுக்கேற்ற மனைவியர்
மணம்புரியத்தகுந்த கன்னிகை
நன்னெறிமாதர் நட்பு
துன்னெறிமாதர் நட்பு
சுகபோகவிஷய முறைமைகள்
மாதத்தீட்டிற் புணர்ச்சி செய்தவின் கேடு
சேராதவளுடன் சேரு முடிவு
மாதரை சேராத நாட்கள்
மாதவிடாயான தினமுதல் 16-நாள் வரைக்கும் புணருங்காலங்கள்
கூடவும் கூடாவொழுக்கமும்
நான்கு பருவப்பெண்களைச சந்தோஷப்படுத்தல்
நான்குசாதிப்பெண்கள் திருப்தியடையச் செய்தல்
சிசுவின் பேதங்கள்
கர்ப்பச்சின்னங்கள்
ஆண்பெண் சிசுவின் குறிகள்
கர்ப்பகால பரிமாணம்
கர்ப்பாசய உபபாகங்கள்
கர்ப்பாசயம் பின்னுக்குவளைதல்
சூதகநிற்பாடும் பரிகாரமும்
சூதகப்பெரும்பாடும் பரிகாரமும்
கற்போற்பத்தி விபரம்
ஆண்மலடா பெண்மலடா
கருப்பையின் அமைப்பு
பிண்டத்தின் அமைப்பு
பிரசவிப்பதை பற்றியவை
கற்போற்பவத்தைப் பற்றியவை
கற்போத்பத்தி எளிதிலறிகுறி
பிரஸவநோய்க்கு முன்னிட்ட [குறி
பிரஸவநோயின் துற்குறி
கிரமப்பிரஸவம்
பலபிள்ளைப் பிரஸவம்
கற்பத்தின்மேற்கற்பம்

இதுபோன்ற இன்னுமனேக விஷயங்களடங்கியது.

இதன் விலை ரூபா 1 8 0